Regd. No. 2975

ஸ்ரீ:

# ஸ்ரீ ராமாநுஜன் 327

ஆசிரியர்: P. B. அண்ணங்கராசாரியர்.

# SRI RAMANUJAN

Editor:
*Mahamahimopadhyaya*
P. B. ANNANGARACHARYA, KANCHIPURAM-631503

வருஷச் சந்தா ரூ. 10.    ஜீவியச் சந்தா ரூ. 100

---

பேரருளாளன் பெருந்தேவித் தாயார் திருவடிகளே சரணம்.



ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

---

ஆழ்வார்கள் வாழி அருளிச்செயல் வாழி*
தாழ்வாது மில்குரவர் தாம்வாழி—ஏழ்பாரு
முய்ய வவர்க ளுரைத்தவைகள் தாம்வாழி*
செய்யமறை தன்னுடனே சேர்ந்து.

1975ஃல புரட்டாசிமீ

# சின்ன ஜீயர் ஸ்வாமியின் ஔதார்யம்.

திருமலை திருப்பதியில் இரண்டு மாதமாக சின்ன ஜீயர்
ஸ்வாமி ஸ்தானத்தில் பட்டாபிஷிக்தரா யெழுந்தருளி
யிருக்கும் ஸ்ரீமத் பரமஹம்ஸேத்யாதி
**ஸ்ரீ கோவிந்த ராமாநுஜ ஜீயர் ஸ்வாமி** நமது பகவத்
விஷயப் பதிப்புக்கு இரண்டாயிரம் ரூபாய்
அநுக்ரஹித்தருளியதை க்ருதஜ்ஞதையுடன்
விஜ்ஞாபித்துக்கொள்ளுகிறேன்.

(பத்திராதிபதாஸன்)

---

## ஸ்ரீ ராமாநுஜ சந்தா வரவுகள் (முன் தொடர்ச்சி)

ஸ்ரீமான்கள்

T. ராமஸ்வாமி ஐயங்கார், திருவல்லிக்கேணி
கிருஷ்ணஸாமி பாகவதர், ரெட்டிமாங்குடி
T. V. கிருஷ்ணஸ்வாமி ஐயங்கார், பேராவூரணி
P. துரைரங்கராமாநுஜதாஸர், நச்சந்தல்
S. A முதந்த ராமாநுஜன், மாரன்பட்டி
K நாராயணஸ்வாமி ஐயங்கார், ஒகூர்
R. ஸ்ரீதேவியம்மாள், திருவல்லிக்கேணி
S. ஸௌம்யநாராயணன், ஸ்ரீரங்கம்
A. V. ஸ்ரீனிவாஸன், பம்பாய்.
T S. திருமலாசாரி, மதராஸ்.

## ஜீவியச்சந்தா செலுத்தினவர்கள்

1. ஸ்ரீ உ. வே. ஸ்ரீ வில்லிபுத்தூர் M T. திருவாழி ராமாநுஜய்யங்கார்.
2. பாண்டிச்சேரி R ஜகன்னாதய்யங்கார்.

---

## பிழை திருத்தம்

இச்சஞ்சிகையில் பக்கம் 13ல் 9வது வரியில் **அன்றுள்** என்பதை (அந்நாள்) என்றும், பக்கம் 14ல் முதல்வரியில், **மூற்ற** என்பதை (முத்த) என்றும் திருத்தி வாசிக்கவேணும்.

---

# விசேஷ அறிவிப்பு

சென்ற மாதத்து ஸ்ரீ ராமாநுஜன் (32லே்) ஸ்ரீ உ. வே. கோயம்புத்தூர் சக்ரவர்த்தி ஐயங்கார் ஸ்வாமியால் எழுதப்பட்டு அவர் திருக்குமாரர்களால் பிரசுரிக்கப்பெற்ற **"எம்பெருமானார் தரிசனம்"** என்கிற ஆங்கில புத்தகத்தின் விமரிசம் வெளியிடப்பட்டிருந்தது. அதைப்பார்த்த பல நண்பர்கள் அது இலவசமாகக் கிடைக்கக்கூடியதென்று நினைத்துவிட்டார்களென்று தெரிகிறது. ஆனால் அது தவறு; அதற்கு நாற்பது ரூபாய் விலை வைத்திருக்கிறதென்பதை இது மூலம் வாசகர்களுக்கு அறிவித்துக் கொள்ளுகிறோம்.

ஸ்ரீ ராமாநுஜன்—327



ஆசிரியர்:
மஹாமஹிமோபாத்யாய ஸ்ரீகாஞ்சீ ப்ரதிவாதிபயங்கரம்
அண்ணங்கராசாரியர்.

ஸம்புடம் 28 | ராக்ஷஸ ஸ்ரீ புரட்டாசிமீ 10—9—75 | ஸஞ்சிகை 3

# கன்யாமாஸமும் - கலியுக தெய்வமும்

கன்யா மாஸ மென்பது—புரட்டாசிமாதம்; கலியுக தெய்வம் - திருவேங்கடமுடையான். புரட்டாசி மாதத்தில் திருவேங்கடமுடையான் ப்ரஹ்மோத்ஸவம் கண்டருளுகிறபடியால் இந்தமாதம் இப்பெருமானுடையதென்று கொள்ளக் குறையில்லை. இம்மாதத்தில் ஆழ்வார் யாரும் அவதரித்தருளவில்லை. ஆசாரியர்களில் ஸ்ரீமந்நிகமாந்தமஹா தேசிகன் திருவவதாரம் செய்துள்ளார். திருவேங்கடமுடையான் பெருமையைச்சிறிது அநுபவித்து விட்டு அவ்வாசிரியரின் ஸ்ரீஸூக்தி யநுபவமும் சிறிது செய்வோம். திருவேங்கடமுடையான் பக்கலில் கட்கூடாக நாம் காணும் பெருமை அனைவருமறிந்ததேயாம். (அதாவது) — பூமண்டலத்திலுள்ள ஸகல ஜனங்களும் பிரார்த்தனைகள் செலுத்த நாடோறும் திரள்திரளாக வந்து தொழுகையாம். பெரியாழ்வார் தம்து திருமொழியில் திருவரங்கப்பதிக மொன்றில்* தென்னாடும் வடநாடும் தொழநின்ற திருவரங்கம் * என்றருளிச்செய்கிறார். ஸ்ரீரங்கத்திற்கு அந்த ஏற்றம் இல்லையென்று நாம் சொல்லுகின்றிலோம். அந்தப்பெருமை சதமுகமாகக் காண்பது திருமலையிலேயாம். *அங்க வங்க களிங்க காம்போஜ காச்மீர காமரூப ஸௌவீர ஸௌராஷ்ட்ர மகத மாகத கேரள நேபாள ஒட்ரமலை



யாள் கர்ணுட குர்ஜர (ஹூண) த்ராவிட ஆந்த்ராதி ஸகல ஜநபதங்களிலிருந்தும் தினப்படியாகப் பதினுயிரக்கணக்கில் ஜனங்கள் வந்து முடிகொடுப்பதும் அங்க ப்ரதக்ஷிணம் பண்ணுவதும், ப்ரஹ்மோத்ஸவம், கல்யாணுேத்ஸவம், ஆமந்த்ரணுேத் ஸவம் என்று பலபல மஹோத்ஸவங்கள் செய்விப்பதும் ஒரு நாள்தவருமல் திருமலை யிலேயன்ரே ?

இக்காலத்தில் ஆஸ்திகர்களின் திரள் அதிகமா? நாஸ்திகர்களின் திரள் அதிகமா? என்று சிலர் கூடி விசாரம் செய்து கொண்டிருந்தனர்; அப்போது நான் "திருமலையில் சென்று பார்த்தால் தெரியும்" என்றேன. உண்மை ! உண்மை !! என்ருர்கள். திருமலையில் காலை 4 மணிக்குச் சென்று க்யூவரிசையில் நின்றவர்கள் மாலை 8 மணிக்குப் பெருமாள் ஸேவைபெறுகிருர்களோ இல்லையோ! என்னவேண்டி யிருக்கிறது என்றேன். அப்போது ஒருவர் சொன்ஞர்–" ஸேவார்த்திஜனங்கள் க்யூ வரிசையில் நிற்பது சிலவாண்டுகளுக்குள் திருமலை யடிவாரத்திலிருந்தே ஏற்படும் போலிருக்கிறது" என்று. இது வாஸ்தவமே.

இப்படிப்பட்ட ஏற்றம் திருவேங்கடமுடையானுக்கு எப்போது தொடங்கி ஏற்பட்ட தென்று ஆராய்ந்து பார்த்தால் கலியுகத் தொடக்கத்திலிருந்தே ஏற்பட் டதென்று திண்ணமாக எண்ணலாம் இதை மூதலிப்பது நம்மாழ்வாருடைய திரு விருத்தத்தில் ஒரு பாசுரமாகும். (அதாவது. அதில் எண்பத்தேராம் பாசுரம் "உறு கின்றகன்மங்கள் மேலன வோர்ப்பிலராய்" இத்யாதி ) திருவிருத்தத்தில் ஆழ்வார் பெரும்பாலும் பெண்பாவனை கொண்டன்ரே புருஷோத்தமனை அநுபவிக்கிருர். பராங்குசநயாகி பரமபுருஷன் பக்கலில் காதல்நோய் கொண்டு தவிக்கின்ருள். நோயின் நிதானமறியாத உற்ருருறவினர், உலகில் சாமானிய ஜனங்களுக்கு உண் டாகும் நோயாக ப்ரமித்து ஏதோ சில லௌகிகபரிஹார முறைகளைச் செய்கின் றனர். ஆழ்வாருடைய இருப்பிடம் நல்லார்நவில் குருகூரகையாலே அங்குள்ள நல்லார்கள் [விலக்ஷண ஸ்வாமிகள்] ஆழ்வாருடைய இயல்பையறியுமவர்களாகை யாலே ஆழ்வாருடைய நோயின் நிதானத்தை உள்ளபடியறிந்து "அந்தோ! இது என்ன அவிவேகிக்ருத்யம்! இப்படிப்பட்ட நிஹீனமான பரிஹார முறைகளையா ஆழ் வார்க்குச் செய்வது! அந்தோ! இது ஸஹிக்கமுடியவில்லையே! இவர்க்குச் செய்ய வேண்டிய பரிஹாரம் இனனதென்று தெரிந்து கொள்ளவில்லையே இவர்கள் **[துழாய் குழல்வாய்த் துறுகின்றிலர்! தொல்லை வேங்கடமாட்டவுஞ் சூழ்கின்றிலர்!]** எம்பெருமானு டைய பிரசாதாமான திருத்துழாயைக் கொணர்ந்து சூட்டுவது, திருவேங்கடமுடை யான் ஸன்னிதிக்கு இவளை அழைத்துவந்து ஸேவிக்கச்செய்கிறேன என்று சொல் லுவது–ஆகிய இவையன்ரே பரிஹாரமுறைகள். இதைச் செய்யாமல் வேறு ஏதே தோ செய்கின்ருர்களே! என்று முறையிடுவதாக அமைந்துள்ள இப்பசுரத்தினுல் திருவேங்கட முடையான் பெருமை நன்கு வெளியிடப்பட்டதாயிற்று.



# ஸ்ரீ ராமாயண விசேஷார்த்தப் பகுதி

தேவப்பெருமாள் ஸன்னிதியில் ஒருநாள் திருச்சந்தவிருத்தம் ஸேவிக்கப் ப்ராப்தமாயிற்று. அதில் இரண்டாம் பாசுரம் *ஆறுமாறு மாறுமாய்* என்பதன்றே. பக்கத்திலிருந்தவர் 'முதலாறுக்கு என்ன அர்த்தம்? இரண்டாவதாறுக்கு என்ன அர்த்தம்? மூன்றாவதாறுக்கு என்ன அர்த்தம்? என்று வினவினர். "திருவாய்மொழியில் [6-6-6] ஆறாவது பத்தில் ஆறாவது பதிகத்தில் ஆறாவது பாட்டு—என்று அர்த்தம்" என்றேன். அவர் சிரித்துக் கொண்டே இப்படியா அர்த்தம்? திருமழிசைப் பிரான் இங்ஙனே திருவுள்ளம் பற்றியா *ஆறுமாறுமாறுமாய் *என்றருளிச் செய்தார்? என்று கேட்டார். கோஷ்டியில் ஸேவிக்கும் ஸமயத்தில் அந்த ஆறுகளை விவரிக்க அவகாசமில்லாமையாலே இப்படி விஜ்ஞாபித்தேன். கோஷ்டி முடிந்த பிறகு வார்த்தை சொல்லுவோம்-என்று நிறுத்திக்கொண்டேன். கோஷ்டிமுடிந்த பின் அந்தஸ்வாமி 'இப்போது ஸாதிக்கவேணும்' என்றார். திருவாய்மொழியில் 6-6-6 என்று விஜ்ஞாபித்தேனல்லவா? அந்தலக்கமுள்ள பாசுரம் எது? அந்தப் பாசுரத்திற்கும் இந்தத் திருச்சந்தவிருத்தப்பாசுரத்திற்கும் ஸம்பந்தமொன்றுமில்லையென்றே கொள்வோம். ஆனாலும் அந்தப் பாசுரம் இன்னதென்று முன்னம் தெரிந்து கொண்டு, அதில் ஏதாவது விசேஷமுண்டாவென்பதை உடனே விமர்சிப்போமென்று சொல்லிவிட்டு அந்தத் திருவாய்மொழிப் பாசுரத்தை எண்ணிப் பார்த்தேன். திருவாய்மொழியில் 6-6-6. என்னும் லக்கமுடைய பாசுரம் *கற்பகக் காவன நற்பல தோளற்கு* என்பதென்றுணர்ந்தேன். அதில் ஈற்றடி *என்விற் புருவக்கொடி தோற்றது மெய்யே* என்பதாதலால் அவ்விடத்து வியாக்கியானத்தில் ஈட்டில் அருளிச்செய்துள்ள ஸ்ரீராமாயணவிசேஷார்த்த மொன்று நினைவுக்கு வந்தது. க்ருஹத்திற்கு வந்து ஸ்ரீகோசத்தையெடுத்து ஸேவித்தும் ஸேவிக்கச் செய்தும் ரஸாநுபவம் பண்ணினோம். அதனை ஈண்டு விவரிக்க விருப்பமுண்டாயது.

(ஸ்ரீராமாயணத்தில்) பிராட்டியின் வடிவுக்கு ஏற்றமா? பெருமாளுடைய வடிவுக்கு ஏற்றமா? என்று ஒருவிசாரம் ஒருகால் ப்ரஸக்தமாயிற்று. ஒருவர் சொன்னார்—பிராட்டியை இலங்கையிற்கண்டபோதே திருவடி *துல்யசீலவயோவ்ருத்தாம் துல்யாபிஜநலக்ஷணாம், ராகவோர்ஹதி வைதேஹீம் தஞ்சேயமஸிதேக்ஷணா* என்று சொல்லியிருக்கக்காணகையாலே திவ்யதம்பதிகளின் திருவடிவத்தின் ஏற்றத்தில் வாசியறிவதற்கு அவகாசமில்லையேயென்று. அதற்குமேல் அடியேன் விஜ்ஞாபிக்கையில், திருவடியின் வார்த்தையிருக்கட்டும்; அந்ததிவ்யதம்பதிகள் பேசியுள்ள பேச்சுக்களால் நெடுவாசி யறியக்கிடக்கின்றது; இதனை நம்பிள்ளை அற்புதமாகக் கண்டறிந்து அருளிச்செய்துள்ளார்—என்று சொல்லி விவரித்தேன்.

கேண்மின்; திருவடிமூலமாகப் பெருமாளுக்கு ஸந்தேசமனுப்புகின்ற பிராட்டி ஜீவிதம் தாரயிஷ்யாமி மாஸம் தசரதாத்மஜ!, ஊர்த்வம் மாஸாத் ந ஜீவிஷ்யே*

என்றாள். அதைத் திருவடிசொல்லக் கேட்ட பெருமாள் *ஊர்த்வம் மாஸாத் ந ஜீவிஷ்யே* என்று பிராட்டி சொன்னாள்? ஒருமாதம் ஜீவித்திருப்பளாகில் நெடுங்காலமும் ஜீவித்திருக்கவல்லளேயாவள்; என்படியைச் சொல்லுகிறேன் கேள்; *ந ஜீவேயம் க்ஷணமபி விநா தாம் அஸிதேக்ஷணாம்* [குவளையங்கண்ணியான அவளைப் பிரிந்து நான் ஒரு நொடிப்பொழுதும் தரிக்ககில்லேன்] என்று. இங்கு ஆராய்ச்சி செய்யவேணும். ஆழ்வார் *அகலகில்லேனிறையுமென றலர் மேல்மங்கையுறை மார்பா!* என்றார். இறையுமகலகில்லேனென்பது பிராட்டியின் வார்த்தையாயிருக்கத்தக்கது. இது *விநா தாம் அஸிதேக்ஷணாம் நஜீவேயம் க்ஷணமபி* என்று பெருமாளுடையவார்த்தையாக ஸ்ரீராமாயணத்தில் உள்ளது. ஆதலால், பெருமாளுடைய திருமேனி ஒருமாஸகாலம் விச்லேஷத்தை ஸஹிக்கும்படியானதென்றும், பிராட்டியின் திருமேனி க்ஷணகால விச்லேஷத்தையும் ஸஹிக்க இயலாததென்றும் விளங்காநின்றதன்றோ?

இனி 6-6-6ல் ஈட்டு ஸ்ரீஸூக்தி கேளீர்;— "(தோற்றதுமெய்யே) *ஊர்த்வம் மாஸாத் ந ஜீவிஷ்யே* என்னப்பண்ணும் வடிவைக்காட்டி, *ந ஜீவேயம் க்ஷணமபி* என்னப்பண்ணும் வடிவைக்கிடீர்கொண்டது." என்று இதைச்சிறிது விவரித்தாகவேண்டும். திருவாய்மொழியில் (6-6)*மாலுக்கு வையமளந்த மணாளற்கு* என்கிற பதிகம் தாய்ப்பாசுரமாகச் செல்லுகின்றது ஆழ்வார் பராங்குச நாயகியாக நிற்கிறபடி. *காவியங் கண்ணியெண்ணில் கடிமாமலர்ப் பாவையொப்பாள்* பின்னைகொல் நிலமாமகள்கொல் திருமகள்கொல் பிறந்திட்டாள்* என்கிற பாசுரங்களிற்படியே ஸாக்ஷாத் பிராட்டியின் ஸ்தானமே பராங்குச நாயகிக்கு ஆயிற்று. [ஆழ்வாரை ஸீதாபிராட்டியாகவே வைத்துச் சொல்லுகிறதாயிற்று.] என்னுடைய மகள் தனது வடிவை அவனுக்குத் தோற்கப் பெற்றாள்—என்று தாய் சொல்லி வருந்துவதாக மூலத்திலுள்ளது. இவ்விடத்திற்குச் சார்பாக நம்பிள்ளைக்கு நினைவுக்குவந்த ஸ்ரீராமாயணார்த்த விசேஷம் மிகவியக்கத்தக்கது. "அவனுடைய வடிவன்றோ தோற்கவேண்டும்; இவளுடைய வடிவு தோற்றது என்னே!" என்பது தாய்பாசுரத்தின் உட்கருத்துப்போலும். மேலே· கம்பர் கவிதைப் பகுதி இதன் தொடர்ச்சியாகவே அநுபவிக்கத்தக்கது. ... *

*ஆறுமாறு மாறுமாய்* என்கிற திருச்சந்த விருத்தப் பாசுரத்திற்கும் இக்கட்டுரைக்கும் என்னஸம்பந்தமென்று கேட்கவேண்டா; 6-6-6 என்கிற லக்கமே விவக்ஷிதம்.

# கம்பர்பெருமான் கவிதைப் பகுதி

கீழ் ஸ்ரீராமாயணவிசேஷார்த்தப் பகுதியைப்படித்தீர்களல்லவா? அதில் பிராட்டியின் வடிவுக்கு ஏற்றம் நிரூபிக்குமிடத்துப் பெருமாளுடைய திருவாக்கு ஒன்று எடுத்துக்காட்டப்பட்டுள்ளதை மறந்திருக்கமாட்டீர்கள். பிராட்டியின் பிரிவை நான் ஒருநொடிப்பொழுதும் ஸஹித்திருக்கவல்லேனல்லேன் என்று கூறுகின்ற பெருமாள் *விநா தாம் ஜநகாத்மஜாம்* என்ருே *விநா தாம் மைதிலீம் ப்ரியாம்* என்ருே கூருமல் *விநா தாம் அஸிதேக்ஷணாம்* என்று கூறியிருப்பது குறிக்கொள்ளத்தக்கது. இதனுல் பிராட்டியின் அவயவஸௌந்தர்யத்திற்குள் கண்ணழகு தனிச்சிறப்புடையதென்பதும் அதில் பெருமாள்தாம் ஈடுபட்டிருக்கும்படியும் விளங்கிற்றுகும். திருவடி இலங்கையிற் பிராட்டியைக்கண்டவுடனே (தன்னில்தான்) சொன்னவார்த்தை *துல்யசீலவயோவ்ருத்தாம் துல்யாபிஜந லக்ஷணாம், ராகவோர்ஹதி வைதேஹீம் தஞ்சேயமஸிதேக்ஷணா* என்பதன்ருே. இதில் (வைதேஹீம்) என்று சொல்லியானபிறகு *தம் ச இயம்' என்ருல் போதுமானது. பாதபூரணம் செய்யவேண்டில் வேறுபதங்களை இட்டு நிரப்பலாம். (அஸிதேக்ஷணா) என்றிட்டது விசேஷித்து நோக்கத்தக்கது. நம்மாழ்வாரும் திருவாய்மொழியில் (9–4-1) *மையார் கருங்கண்ணி கமலமலர்மேல் செய்யாள்* என்றருளிச் செய்வது காண்மின். இங்கு (மையார் கருங்கண்ணி) என்றது-மையிட்டதனுல் கறுத்தகண்ணையுடையவள் என்றபடியன்று "இயற்கையாகவே கருங்கண்ணி; மங்களார்த்தமாக மையிட்டபடி" என்பர் ஆசிரியர்கள்.

கம்பர் தமது இராமாயணத்தில் சுந்தரகாண்டத்தில் திருவடிதொழுத படலத்தில், அனுமன் தான்பிராட்டியைக் கண்டமையைப் பெருமாளிடம் கூறுமிடத்து-*கண்டனென் கற்பினுக்கணியைக் கண்களால், தெண்டிரையலைகடலிலங்கைத் தென்னகர்* என்று கூறியுள்ளார். அனுமான் தான்பிராட்டியைக் கண்களால் கண்டதாகக் கூறுகின்ருன். உலகத்தார்பேச்சுக்களில் "அவரை நான் கண்டேன், கண்ணுல்கண்டேன்" என்று கூறுவதுண்டு. நிச்சயமாகக் கண்டேனென்று கூறுவதற்குப் பர்யாயமாகக் கண்ணுல் கண்டேனென்று கூறுவது வழக்கம். அவ்வாருகவே இங்கு அனுமன் கண்களால் கண்டேனென்று கூறுவதாகப் பலர் பொருள் விளக்குவர். கம்பர் கருதிய பொருள் அதுவன்று. இச்செய்யுளில் (கண்களால்) என்றது தன் கண்களால் என்றபடியன்று, சீதாபிராட்டியின் கண்களாலென்றபடி. அவளுடைய திருக்கண்களைக்கொண்டு இவள்தான் பிராட்டியென்று அறிந்துகொண்டேனென்றவாறு. பிராட்டியைத் தேட வானர முதலிகளை நியமிக்கும்போது அனுமனிடத்தில் விசேஷித்துப் பெருமாள் கூறினவற்றில் பிராட்டியின் கண்ணழகைப்பற்றிச் சிறப்பித்துக் கூறியிருத்தல் வேண்டும். ஆகவே தான் *தஞ்சேயம் அஸிதேக்ஷணா* என்ருர் திருவடி. கம்பர் இவ்வர்த்த விசேஷத்தை பட்டர் கோஷ்டியில் கேட்டிருந்ததனுலேயே "கண்களால் கண்டேன்" என்று அனுமன் கூறினதாகச் சொல்லிவைத்தார்.

ஸ்ரீராமாயணம் ஸுந்தரகாண்டத்தில் (31—15) *யதாரூபாம் யதாரூபாம் யதாவர்ணாம் யதாலக்ஷ்ம ச நிச்சிதாம், அச்ரௌஷம் ராகவஸ்யாஹம் ஸேயமாஸாதிதா மயா* என்பது திருவடியின் வார்த்தை. இதனுல், பிராட்டியின் கண்ணழகைப்பற்றித் திருவடி பெருமாளிடம் கேட்டிருக்கிருனென்பது திண்ணம்.

# குணாநுபவரஸிகர்களுக்குக் குதூஹலவிருந்து

நம்மாழ்வார் திருவாய்மொழியில் (5–10.) *பிறந்தவாறும் வளர்ந்தவாறும்!!* என்று க்ருஷ்ணாவதார சரிதைகளை யநுபவிக்கத்தொடங்கினார். முதற்பாட்டு கேட்டவுடனே எமபெருமான் ஓடிவந்து 'ஆழ்வீர்! எனசரிதைகளில் உமக்கு எது மிகவினிது?' என்று வினவ, *அது விது வுது என்னலாவனவல்ல என்னை உன்செய்கை நைவிக்கும்* என்றாராழ்வார். இதையே கூரத்தாழ்வான் ஸுந்தர பாஹுஸ்தவத்தில் *இங்கிதம் நிமிஷிதஞ்ச தாவகம் ரம்யமத்புதம் அதிப்ரியங்கரம்* என்று மொழிபெயர்த்தாப்போலருளிச் செய்தனர். ஆழ்வார் பாசுரத்தில் உன்செய்கை என்றது உயிர். ஆழ்வான் ஸ்ரீஸூக்தியில் (தாவகம்) என்றது ஜீவநாடி.

திருவாய்மொழிக்கு (1-2-11ல்) *சீர்த்தொடையாயிரம்* என்று ஒரு திருநாமம் சாற்றியுள்ளார். உலகில் பூமாலை தொடுப்பவர்கள் பலவகைப் புஷ்பங்களை வைத்துக்கொண்டு அவற்றையிட்டுத் தொடுக்குமாபோலே ஆழ்வார் தமது செந்தமிழ்ச் செஞ்சொல் மாலையை எம்பெருமானது பலவகைத் திருக்கல்யாண குணங்களையிட்டுத் தொடுத்தருளினர் என்றவாறு.

"நால்வர் கூடி நான்கு பிள்ளைகள் பெற்றனர்; நால்வர்கூடி ஒரு பிள்ளையைப் பெற்றனர்; அறுவர்கூடி ஆயிரமாயிரம் பிள்ளைகளைப்பெற்றனர்" என்றொரு விநோத வசனமுண்டு. (1) நால்வர்கூடி நான்கு பிள்ளைகள் பெற்றது ஸ்ரீராமாவதாரத்தில். (2) நால்வர்கூடி [வஸுதேவ தேவகீ நந்தகோப யசோதைகள் கூடி] ஒரு பிள்ளையைப் பெற்றது ஸ்ரீ க்ருஷ்ணாவதாரத்தில். இவ்விரண்டும் ப்ரஸித்தம், அறுவர்கூடி ஆயிரமாயிரம் பிள்ளைகள் பெற்றதைக் கூரத்தாழ்வானருளிச்செய்கிறார். *ப்ரக்ருஷ்டம் விஜ்ஞாநம்* என்றுதொடங்கி *ப்ரவரகுணஷட்கம் ப்ரதமஜம் குணாநாம் நிஸ்ஸீமநாம் கணநவிகுணாநாம் ப்ரஸவபூ:* என்று. ஜ்ஞானம் பலம் ஐச்வர்யம் வீர்யம் சக்தி தேஜஸ்ஸு என்கிற ஆறு குணங்கள் கூடி தயாக்ஷாந்தி ஔதார்யாதிகளான அபரிமித கல்யாண குணங்களை ப்ரஸவித்தனவென்றபடி. இத் திருக்குணங்களெல்லாம் பரமபதநாதனிடத்திலு மிருக்கச்செய்தேயும் பரம ஸாம்யாபந்நர்களான நித்யமுக்தர்களுள்ள அவ்விடத்திலே பாத்வகுண மொன்றொழிய மற்ற குணங்கள் பிரகாசிக்க வழியில்லாமையாலே அத் திருக்குணங்களையெல்லாம் பிரகாசிப்பிக்கவேண்டியே பயணமெடுத்து வருகிறான் பரமன் இந் நிலவுலகுக்கு. இதனை பட்டர் *குணபரீவாஹாத்மநாம் ஜந்மநாம்* என்கிற ஸ்ரீஸூக்தியினால் விளங்கவைத்தார். *பூரோத்பீடே தடாகஸ்ய பரீவாஹ: ப்ரதிக்ரியா* என்றான் பவபூதி மஹாகவி. ஜலாசயங்களில் நீர் மிகமிக நிரம்பிவிட்டால் அதற்குப்போக்குவீடுவிட்டு ஜலாசயத்தைத்தரிக்கச்செய்வது வழக்கம். அங்ஙனே நீர் வெளிப்படுவதற்குப் பரீவாஹமென்று பெயர். அதுபோல, பரமபதநாதனுடைய திருக்குணங்கள் அங்கு விலைசெல்லமாட்டமையாலே பரீவாஹாபேக்ஷை பிறந்து பரன் இந்நிலவுலகில் அவதரிக்கலாகிறது; அந்தத்திருக்குணங்களெல்லாம் இருட்டறையில் விளக்குப்போலே ப்ரகாசிப்பது இங்கேயாம். விபவாவதாரங்களையும் அர்ச்சாவதாரங்களையும் நோக்கி இங்கே என்கிறது. முந்துற முன்னம் விபவாவதாரங்களைக் கொள்வோம். மத்ஸ்யகூர்மாதிகளான விபவாவதாரங்களுள் ஸ்ரீராமாவதாரத்திலும் ஸ்ரீக்ருஷ்ணாவதாரத்திலுமே திருக்குணங்களை

கொள்ளை கொள்ளையாக அநுபவிக்க ப்ராப்தமாகிறது. முராரி மஹாகவி அநர்க்க ராகவ நாடகத்தில் கூறுகின்றார்—[யதி க்ஷுண்ணம் பூர்வைரிதி ஜஹதி ராமஸ்ய சரிதம் குணைரேதாவத்பிர் ஜகதி புநரந்யோ ஜயதி க:? ஸ்வமாத்மாநம்......கதமுப கரிஷ்யந்தி கவய:?] என்று இதன் கருத்தாவது-முற்காலத்தில் காவ்யநாடக சம்பூப்ர பந்தங்கள் இயற்றும் கவிகளெல்லாரும் ஸ்ரீராம சரித்திரத்தைப் பற்றியே எழுதிக் கொண்டிருந்தபடியால் நாம் அப்பெருமானைவிட்டு வேறொரு பெருமானுடைய சரித்திரத்தைத் தொடுக்கலாமென்று பார்த்தால், இவ்வளவு திருக்கல்யாண குணங்களோடுகூடிய வேறொரு பகவத்வ்யக்தி யில்லையே! அது கிடக்க; கவிதா சாதுர்யம் பெற்ற கவிகள் தங்களுடைய வாக்வைபவத்தை ஸார்த்தகமாக்கிக் கொள்ளவேணுமானால் இராமபிரானைத் தவிர்த்து வேறு எந்த வ்யக்தியைக் கொள்ள முடியும்? என்பது இந்த ச்லோகத்தின் கருத்து. ப்ரஸந்நராகவகர்த்தா இக்கருத்தைச் சிறிது மேம்படுத்திக் கூறுகின்றார். ["ஸ்வஸூக்தீநாம் பாத்ரம் ரகுதிலகம் ஏகம் கலயதாம் கவீநாம் கோ தோஷ:? ஸ து குணகணாநாம் அவகுண:, யதேதை: நிச்சேஷை: அபரகுணலுப்தைரிவ ஜகதி அஸாவேக: சக்ரே ஸததஸுகஸம்வாஸ வஸதி:] இந்த ச்லோகத்தின் கருத்தாவது:-(இதில் 'சக்ரே' என்கிறக்ரியைகர்த்தரி ரூபம் அன்று. கர்மணிரூபம்-செய்யப்பட்டானென்கை) கவிகளாய்ப் பிறந்தவர்களெல்லாரும் தங்கள் தங்கள் ஸூக்திகளுக்கு ஸ்ரீராகவனொருவனையே பாத்திரமாகக் கொள்வதானது கவிகளுடைய தோஷமன்று. ராகவனுடைய திருக்குணங்களின் தோஷமாகும். ஸகல குணங்களும் ஒன்று சேர்ந்து தாங்கள் நல்லதோர் ஆச்ரயம் பெற்று அதனால் மேன்மைபெறவணுமென்று ஆசைப்பட்டு ஸ்ரீராகவனிடத்திலே வந்து சேர்ந்து இனிது வாழ்கிறபடியால் ஸ்ரீராகவனொருவனே கவிதாபாத்ரமாகிறானென்றபடி. ஸ்ரீராமாயணத்தில் எந்தவிடத்தில் கயிறுபோட்டுப் பார்த்தாலும் இராமபிரானுடைய திருக்குணங்களே மிகமிகக் காணலாகும். ஆரம்பத்திலுள்ள வால்மீகி நாரத ஸம்வாதம் குணப்ரசுரம். பிறகு அயோத்யாவாஸிஜனங்கள் முகமாகவும் சூர்ப்பணகை தாரை. மந்தோதரி முதலானார் முகமாகவும் வால்மீகி பகவான் வெளியிட்டுள்ள திருக்குணங்கள் அபரிமிதம். வையவந்த வாயாலே வாழ்த்துகிறபடி.

பெருமாள் இராவணனோடு போர் புரியும்போது "இன்று போய் நாளைவா" என்றதில் ஈடுபட்ட கூரத்தாழ்வான், (அதிமாநுஷ ஸ்தவத்தில்) "கோயம் குணகதரகோடிகத: கியாங்வா கஸ்ய ஸ்துதே: பதம் அஹோ பத! கஸ்ய பூமி:" என்று வியக்கிறார். பட்டர் ஸஹஸ்ரநாம பாஷ்யத்தில் "பரர்த்தி: பரமஸ்பஷ்ட:" என்பது முதலான பதினாறு திருநாமங்கள் இராமபிரானுடைய திருக்குணங்களைச் சொல்லுகின்றனவென்று வியாக்கியானிக்கத்தொடங்குகையில் 'இத உபரிம்ருதஸஞ்ஜீவனம் ராமவ்ருத்தாந்த: ப்ரஸ்தூயதே' என்று அவதாரிகை இட்டருளுகிறார். பல சொல்லி என்! திருவடி மோக்ஷ ஸாம்ராஜ்யத்தையும் வெறுத்து ராம குணநுபவத்திற்கென்றே சிரஞ்ஜீவி பட்டம் பெற்று இவ் விபூதியிலேயே விளங்கிவருகிறார்.

திருவாய்மொழியில் (2-7-4) "தேவுந்தன்னையும் பாடியாடத் திருத்தி "என்றவிடத்து ஈட்டில் "தேவு மென்கிறது ஐச்வர்யத்தை. தன்னை என்கிறது ஆச்ரித பாரதந்த்ர்யத்தை. அதிறே தானான தன்மை. 'ஆத்மாநம் நாதிவர்த்தேதா:' என்றானிறே. ஆத்மபூதம் பரதம் நாதிவர்த்தேதா: என்கிறானென்று சிலர் சொல்லுவர்கள்" என்றருளிச் செய்து அதைமறுத்து பட்டர் நிர்வஹித்த அர்த்தத்தை அற்புதமாக

எடுத்துக்காட்டுகிறார் நம்பிள்ளை. சித்ரகூடத்தில் பரதாழ்வானுடைய ப்ரார்த்தனையை தலைக்கட்டி வைக்க வேணுமென்று கூறுகின்ற வஸிஷ்ட பகவான் 'ஆத்மாநம் நாதி வர்த்தேதா:' என்று கூறுவதானது ஆச்ரித பாரதந்த்ர்யமாகிற ஸ்வஸ்வபாவத்தை இழக்கலாகாது என்று சொல்லுவதாகப் பொருள் செய்தருளி. 'தேவுந்தன்னையும்' என்ற திருவாய்மொழிப் பாசுரத்தோடு ஸமந்வயம் செய்திருப்பதானது நம் பூர்வாசாரியர்களுக்கன்றி மற்றெவர்க்கும் நில மன்று. ஸஹஸ்ரநாமத்தில் "விஜிதாத்மா விதேயாத்மா" என்றவிடத்தில் ஆதி சங்கராசாரியர் அவிதேயாத்மா என்று பதம் பிரித்து ரஸபங்கமாக வியாக்கியானம் செய்திருப்பதைத் தள்ளி 'விதேயாத்மா' என்றே பதம் பிரித்து பட்டர் செய்தருளியிருக்கிற வியாக்கியானம் இனிமையே வடிவெடுத்தது அவருடைய திருத்தகப்பனுரான ஆழ்வான் 'அநந்யாதீநத்வம் தவ கில ஜகுர் வைதிககிர: பராதீநம் த்வாம் து ப்ரணத பரதந்த்ரம் மநுமஹே" என்கிற ச்லோகரத்னத்தினுல் எம்பெருமானுக்கு ஆச்ரித பாரதந்த்ர்யமே வடிவு என்பதை நிலைநாட்டியருளினர். பகவத்கீதையின் உள்ளே இறங்கினுல், *அஹம் ஸர்வஸ்ய ப்ரபவ:* இத்யாதி ச்லோகங்களினுல் அவனுடைய பரத்வம் வெளிவரக் கூடும். கீதையின் ஆரம்பத்தை நோக்கினுல் அவனது இயற்கையான ஆச்ரித பாரதந்த்ர்யமே வெளியாகும். கீதையின் ஆரம்பம் என்ன? "ஸேநயோருபயோர் மத்யே ரதம் ஸ்த்தாபய மேச்யுத" என்று கூசாமல் சொல்லுகிருன் அர்ஜுநன். கண்ணபிரான் "என்னை நியமிக்க நீ யார்?" என்று கேளாதே அப்படியே ஆஜ்ஞாபரிபாலனம் செய்திருக்கிருன்.

திருமங்கையாழ்வார் பெரிய திருமொழியில் இரண்டு திருமொழிகளினுல் அற்புதமான அநுபவம் காட்டுகிருர். பரத்வத்தை முன்னே அநுபவித்து ஸௌலப்யத்தைப் பினனே காட்டுவது ஒரு பதிகம். ஸௌலப்யத்தை முன்னே காட்டிப் பரத்வத்தைப் பின்னே காட்டுவது ஒரு பதிகம். (10—6) *எங்கானுமீதொப்பதோர் மாய முண்டே* என்கிற பதிகத்தில் பாசுரந்தோறும் மூன்றேகால் அடிகளால் அவனுடைய பரத்வத்தைப் பேசி "அவன் காண்மினின்ருய்ச்சியரால் அளைவெண்ணெயுண்டாப்புண்டிருந்தவனே" என்று ஸௌலப்யத்தைப் பேசித் தலைக்கட்டுகிருர். அந்தப் பெரிய திருமொழி தன்னிலேயே (*11-5*) *மானமருமென்னேக்கிப் பதிகத்தில் ஒருத்தி முன்னடிகளால் ஸௌலப்யத்தையும் ஒருத்தி பின்னடிகளால் பரத்வத்தையும் பேசுவதாக வைத்து உபயகுணங்களையும் அற்புதமாக அநுபவித்திருப்பது காண்க. இவையன்ரே அநுபவரஸிகர்களின் படிகள்.

தாயெடுத்த சிறு கோலுக்கு உளைந்தோடுங் கண்ணன் ததிபாண்டனைச் சரணமடைந்து தயிர்த்தாழியிலே மூச்சுத் திணறிக்கிடந்தது ஒருபுறம்; உனக்கும் உன் தயிர்த்தாழிக்கும் உன்னைச் சார்ந்த இருபது மனைக்காரர்களுக்கும் மோக்ஷமளித்தேனென்பது ஒருபுறம்.

அட்டுக்குவி சோற்றுப் பருப்பதமும் தயிர்வாவியும் நெய்யளறுமடங்கப் பொட்டத்துற்றி மழைவந்தெழுநாள் பெய்வித்துக் கொடியேறு செந்தாமரைக்கை விரல்கள் கோலமுமழியாதே வாடாதே வடிவேறு திருவுகிர் நோவாமே குன்றமொன்றெடுத்தேந்திநிற்பது ஒருபுறம்;.........*தேவோ வா தாநவோ வா த்வம் யக்ஷோ கந்தர்வ ஏவ வா? என்று வினவினுரைச் சீறி *அஹம் வோ பாந்தவோ ஜாத: என்றது மற்ருெருபுறம்.

# வேதப் பகுதி.

தைத்திரீயயஜுஸ்ஸம்ஹிதையில் நாம் விமர்ஶம் செய்யவேண்டிய பதங்கள் ஒரு ஆயிரம் இருக்குமென்று வைத்துக் கொள்வோம். இதுவரையில் அடியேன் க்ரந்தங்களிலும் ஸ்ரீ ராமாநுஜன் அம்ருதலஹரீ வைதிக மநோஹரா முதலிய பத்ரிகைகளிலும் விமர்ஶித்த பதங்கள் இருநூறு அல்லது இருநூற்றைம்பது இருக்கலாம் இன்னும் எழுநூற்றைம்பது பதங்களைப்பற்றின விமர்ஶம் அவர்ஜநீயமேயாகும். க்ஷணஶ: கணஶ: என்கிற கணக்கிலே விமர்சம் வெளியிட்டு வருவோம்.

(1—1ல்.) *உவீ௨ஶாஸி வஸ்வீ ஶாஸி* என்றவிடத்தில் (உவி௨-உர்வீ) என்கிற பதத்தையும், (4—7ல்.) *க்ஷேத்ரஸ்ய பத்நீ அதி நோ ப்ரூயாத* என்றவிடத்தில் (பத்நீ-பத்நீ) என்கிற பதத்தையும்பற்றி விமர்ஶிப்போமிப்போது. *உவீ௨-உர்வீ* என்கிற பதமானது ஸ்த்ரீலிங்க ப்ரதமைக வசநாந்தமென்பதை யாவரும் அறிவர். (1-1.) * உர்வீ சாஸி வஸ்வீ சாஸி * என்றவிடத்தில் அப்படித்தானுள்ளது. (4-7.) * உவீ௨ ரோதஸீ வரிவ: க்ருணோத * என்றவிடத்திலுள்ள உர்வீபதமானது அப்படிப்பட்டதன்று. முதலில் ஸ்வர பேதத்தை ஸ்பஷ்டமாகக் காணலாம். * உர்வீ சாஸி * என்றவிடத்தில் (உர்வீ) ஆத்யநுதாத்தமும் அந்தோதாத்தமுமாகவுள்ளது. * உர்வீ ரோதஸீ * என்றவிடத்தில் (உர்வீ) ஆத்யுதாத்தமும் அந்தஸ்வரிதமுமாகவுள்ளது. இந்த ஸ்வரபேதம் ஸம்ஹிதைமட்டும் ஓதினவர்களுங் கூடத் தெரிந்து கொள்ளக் கூடிய விஷயம். இதற்குமேல் பதக்ரமாதிகள் ஓதினவர்கள் தெரிந்து கொள்ளக் கூடிய விசேஷமென்னவென்றால், (உவீ௨ இத்யுவீ௨) என்று ப்ரக்ரஹம் ஓதபபட்டுவருவதால் *ஈதூதேத்த்³விவசநம் ப்ரக்ருஹ்யம்* என்ற வியாகரண ஸூத்ரப்படி (உர்வீ) என்கிற இப்பதம் த்விவசநாந்தமென்று தெரிந்து கொள்ளலாகும். லோகத்தில் (உர்வீ) என்கிற பதம் எந்த லிங்கத்திலும் த்விவசநாந்தமாக வருவதற்கு ப்ரஸக்தியில்லை. ஆகவே இது ப்ரக்ருஹவாக்யத்தினால் ஶாந்தஸமென்று அறுதியிடலாகும். ஆக, உர்வீ என்கிற பதத்திற்கு இரண்டு ஆகாரம் அறியப்பட்டதாக வேணும்.

இனி (பத்நீ – பத்நீ) என்கிற பதத்தை யெடுத்துக்கொள்வோம். இதுவும் ஸ்த்ரீலிங்க ப்ரதமைகவசநாந்த மென்பதைப் பலருமறிவர். (6 – 3.) * அயெ௨ஶாவா ஷை க்ருதநோ யத்பத்நீ * என்ற விடத்திலுள்ள பத்நீ பதமானது கீழே காட்டின * உவீ௨ஶாஸியில் உர்வீபதம் போலவே ப்ரதமைகவசநாந்தமாகும். (4 – 7ல்) * க்ஷேத்ரஸ்ய பத்நீ அதி நோ ப்ரூயாத * என்றவிடத்தில் (பத்நீ)பதம் ஸ்வரபேதங் கொண்டுவருவதை ஸம்ஹிதைமட்டுமோதினவர்களும் எளிதிலுணர்வர்கள். இந்த பதம் (6-3ல்) ஆத்யுதாத்தமும் அந்த்யஸ்வரிதமுமாகும். (4-7ல்) நிஹத (ஸர்வாநுதாத்த) மாகும். தவிர, (பத்நீ இதி பத்நீ) என்று ப்ரக்ருஹமுமோதப்படுகிறதிதற்கு.

ஆகவே இது த்விவசநாந்தபத மென்று அறுதியிடலாகும். லோகத்தில் இப்படிப் பட்ட த்விவசநாந்தபதம் கிடையாது. இது மட்டுமன்று. இங்ஙனே மற்றும் பல பதங்களும் (வேதத்தில்) காணலாம். 𑌦𑍇𑌵𑍀, 𑌮𑌾𑌨𑌵𑍀, 𑌗𑍌𑌰𑍀, 𑌵𑍈𑌷𑍍𑌣𑌵𑍀......... இத்யாதி பதங்களும் உள்ளன. இவற்றுக்கும் 𑌸𑍂𑌤𑍍𑌰𑌂 ஓதப்பட்டுவருகின்றதன்றோ. இப்பதங்களுக்கு ஏகவசநரூபம் எவ்வாறிருக்கு மென்று ஆலோசிக்கவேணும். இவையே ஏகவசநரூபங்களாகும். 𑌦𑍇𑌵𑍍𑌯𑌃, 𑌮𑌾𑌨𑌵𑍍𑌯𑌃, 𑌗𑍌𑌰𑍍𑌯𑌃, 𑌵𑍈𑌷𑍍𑌣𑌵𑍍𑌯𑌃 என்றிருக்கவேண்டியவை 𑌛𑌾𑌨𑍍𑌦𑌸மாக இப்படியிருக்கின்றன வென்று கொள்ள வேணும் என்று தோன்றுகிறது. பெரியார்கள் தெளிவிக்கவேணும். .... ....*

## ஸம்ஸ்க்ருத கவிவாக்குப் பகுதி

ஸ்ரீராமாயண கதைகளை நாடகமாகக் கவிகள் இயற்றிய நூல்கள் பலவுண்டு. மஹா வீர சரிதம், உத்தரராமசரிதம், அநர்க்கராகவம், ப்ரஸந்நராகவம் இத்யாதி கள். அவற்றுள் ப்ரஸந்ந ராகவத்தில், ஸீதாவியோகத்தில் இராமபிரான் படுகிற கிலேசங்களைக் கூறிவருமிடத்து ஒரு சுலோகம்; (அதாவது — ராம லக்ஷ்மண ஸம்வாதரூபமானது)

"𑌸𑍌𑌮𑌿𑌤𑍍𑌰𑍇 𑌨𑌨𑍁! 𑌸𑍇𑌵𑍍𑌯𑌤𑌾𑌂 𑌤𑌰𑍁𑌤𑌲𑌂 𑌚𑌣𑍍𑌡𑌾𑌂𑌶𑍁𑌰𑍁𑌜𑍍𑌜𑍃𑌮𑍍𑌭𑌤𑍇,
𑌚𑌣𑍍𑌡𑌾𑌂𑌶𑍋𑌰𑍍𑌨𑌿𑌶𑌿 𑌕𑌾 𑌕𑌥𑌾? 𑌰𑌘𑍁𑌪𑌤𑍇! 𑌚𑌨𑍍𑌦𑍍𑌰𑍋𑌽𑌯𑌮𑍁𑌨𑍍𑌮𑍀𑌲𑌤𑌿 ।
𑌵𑌤𑍍𑌸𑍈𑌤𑌦𑍍𑌵𑌿𑌦𑌿𑌤𑌂 𑌕𑌥𑌂 𑌨𑍁 𑌭𑌵𑌤𑌾, 𑌧𑌤𑍍𑌤𑍇 𑌕𑍁𑌰𑌙𑍍𑌗𑌂 𑌯𑌤𑌃
𑌕𑍍𑌵𑌾𑌸𑌿 𑌪𑍍𑌰𑍇𑌯𑌸𑌿! 𑌹𑌾 𑌕𑍁𑌰𑌙𑍍𑌗𑌨𑌯𑌨𑍇! 𑌚𑌨𑍍𑌦𑍍𑌰𑌾𑌨𑌨𑍇 𑌜𑌾𑌨𑌕𑌿! ॥

(இதன் கருத்து.) ஸூர்யன் அஸ்தமித்துச் சந்திரோதயமுமான பின்பு பெருமாளுடைய திருமேனி தபிப்பதனால் இளையபெருமாளை நோக்கி 'இளையா! கதிராயிரமிரவி கலந்தெரிக்கிறான், தாபம் ஸஹிக்கமுடியவில்லை; ஒரு மரத்தடியில் போய் உட்காரலாம் வா' என்று அழைக்கிறார் [ஸௌமித்ரே! நநு ஸேவ்யதாம் தருதலம், சண்டாம்சு: உஜ்ஜ்ரும்பதே ] என்று. இங்ஙனம் கூறினபெருமாளை நோக்கி இளைய பெருமாள் கூறுகின்றார் [சண்டாம்சோ: நிசி கா கதா? ரகுபதே! சந்த்ரோயம் உந்மீலதி] ராகவா! இது பகற்போதன்றே, இராப்போதாயிற்றே. இப்போதே * 𑌅𑌗𑍍𑌨𑌿𑌶𑍍𑌚 𑌮𑌾 𑌮𑌨𑍍𑌯𑍁𑌶𑍍𑌚.......... 𑌇𑌮𑌂 𑌮𑍇 𑌵𑌰𑍁𑌣 * மந்த்ரங்கள் சொல்லி ஸாயம் ஸந்த்யா வந்தனம் செய்தருளிற்றே; இப்போது ஸூர்யதாபத்திற்கு என்ன ப்ரஸக்தி? அம்ருதகிரணனான சந்திரனன்றோ ஒளிர்கின்றான். இங்ஙனம் லக்ஷ்மணன் சொல்லக்கேட்ட இராகவன் [வத்ஸ! ஏதத் விதிதம் கதம் நு பவதா?] இளையா! சந்திரன் உதிப்பதாகச் சொல்லுகிறாயே; தபிப்பதைக்கொண்டு நான் ஸூர்யனென்கிறேன், நீ எது கொண்டு சந்திரனென்கிறாய்? என்ன; அதற்கு மறுமொழி கூறுகின்றான் இளையோன் [தத்தே குரங்கம் யத:] மூத்தண்ணா! மடியில் மான் குட்டியை வைத்துக்கொண்டிருக்கிறான் பாரும்; சந்திரனுக்குத் தானே ம்ருகாங்க

என்று பெயர். ஸூர்யனுயிருந்தால் அவனுக்கு மான் குட்டிகிடையாதே; என்று. இப்படி மானின் ப்ரஸ்தாவமும் சந்திரனுடைய ப்ரஸ்தாவமும் வந்தபடியாலே பெருமாள் பிராட்டியின் மானேய் கண்ணேயும் திங்கள் திருமுகத்தையும் நினைத்துப் புலம்புகிறார் [க்வாஸி ப்ரேயஸி! ஹா குரங்க நயநே! சந்த்ராநநே! ஜாநகி!.] காதலீ! மானமரு மென்னேக்கி வைதேவீ! திங்கள் திருமுகத்துச் சேயிழையாய்! எங்கே ஒளித்திருக்கிருய்? என்று அலற்றுகிறார்.

---

## ஸுபாஷிதப் பகுதி

ஆஶாயா யே தாஸா: தே தாஸா ஹந்த! ஸர்வலோகஸ்ய ।
ஆஶா தாஸீ யேஷாம் தேஷாம் தாஸாயதே ஜகத்ஸர்வம் ॥

[ஆசாயா யே தாஸாஸ் தே தாஸா ஹந்த! ஸர்வலோகஸ்ய,
ஆசா தாஸீ யேஷாம் தேஷாம் தாஸாயதே ஜகத் ஸர்வம்.

இது லோகாநுபவத்திற்கு மிகவும் பொருந்திய சுலோகம். * ஆசைவாய்ச் சென்ற சிந்தையராகி * என்று பெரியாழ்வார் அருளிச்செய்தபடியே ஆசைக்கு வசப் பட்டிருக்குமவர்கள் உலகத்தவர்களனைவர்க்குமே வசப்பட்டவர்களாவர்; ஆசை யானது யாருக்கு வசப்பட்டிருக்கின்றதோ, அவர்களுக்கு உலகமெல்லாம் வசப் பட்டிருப்பதாகும்—என்பது இந்த சுலோகத்தின் பொருள். ஆசைக்கு வசப்பட் டிருப்பதென்றால்—அப்ராப்த விஷய வைராக்ய மின்றிக்கே கண்டதிலும் ஆசை வைப்பது என்றபடி. அப்படிப்பட்டவர்கள் உலகத்திலுள்ள யாவர்க்குமே அடி மைப்பட்டவர்களாவர்; தம்தம் ஆசைகள் நிறைவேறுவதற்காக இன்னாரினையா ரென்று பாராதே எல்லாரையுமே அநுவர்த்தித்தாகவேண்டுமல்லவா? ஆசைக் குத் தாம் வசப்பட்டிருக்கையன்றிக்கே ஆசையைத் தம் வசத்திலே கொண்டிருப்ப தாவது—ப்ராப்த விஷயத்திலே ஆசை கொள்வதாம். இப்படிப்பட்டவர்களுக்கு உலகமெல்லாம் அடிமைப்பட்டதாகும். ஆசை யென்பது ஸர்வாத்மநா ஹேய மன்று. ஆழ்வார்களுக்கு எம்பெருமான் பக்கலில் உண்டாகும் பக்தியானது காதல் அன்பு வேட்கை அவா என்னுஞ் சொற்களாலே யன்றோ வழங்கப்படுகிறது. * ஆசைவழுவா தேத்துமெமக்கு * என்றும், * ஆசையோ பெரிது கொள்க அலை கடல் வண்ணர்பாலே * என்றுமருளிச் செய்கிறார் திருமங்கையாழ்வார்.

அப்ராப்த விஷயங்களில் ஆசையைப்பற்றி ஸ்ரீ வைகுண்ட ஸ்தவத்தில் கூரத்தாழ்வான் அருளிச் செய்வது கேளீர்;— (சுலோகம் – 95)

“ ஹேயேஷு துச்சஸுகதேஷ்வபி ஸாம்ப்ரதேஷு
ஜாதா ஸஹஸ்ரகுணதத்வித்ருஷ்ணைவ ।
வித்வேஷஸித்தேஷ்வபி தேஷு ஸதாப்ரவாதம்
மய்யக்ஷ்ணைவ, ந து பாஸ்யதி ஹந்த! த்ருஷ்ணா ॥

[லப்யேஷு துர்லபதரேஷ்வபி வாஞ்சிதேஷு
ஜாதா ஸஹஸ்ரகுணதத்ப்ரதிலம்பநேபி,
வீக்ஷைர் ஹதேஷ்வபி ச தேஷு ஸமூலகாதம்
வர்த்திஷ்ணுரேவ ந து சாம்யதி ஹந்த! த்ருஷ்ணா.]

என்பது ஆழ்வானுடைய ஸ்ரீ ஸூக்தி. இதன் கருத்தாவது;—உலகில் எளிதாகக் கிடைக்கக் கூடியவையுமுண்டு; எவ்வளவு சிரமப்பட்டாலும் கிடைக்கமாட்டாத வையுமுண்டு; நம்முடைய ஆசை எல்லாவற்றிலுமே ப்ரஸரிக்கும். நாம் கோலின பலனுக்கு மேற்பட ஆயிரமாயிரமாகக் கை கூடினாலும், இடையூறுகளினால் ஆசைகள் பங்கமடைந்தாலும் மேன்மேலும் ஆசை வளர்ந்து செல்லுகின்றதேயன்றி ஓய்வதென்பது கிடையாது—என்றபடி. ஸம்ஸாரிகளான நம்போல்வாருடைய படி இங்ஙனே தானேயுள்ளது. இத்தகைய ஆசையை வென்றவர்களுக்கு உலகமெல்லாம் அடிமைப்பட்டதாகுமென்பது ப்ரக்ருத ஸுபாஷிதத்தின் தாற்பரியம். *

## ஸ்ரீ வில்லிபுத்தூரில் ஸ்ரீ வசனபூஷண காலக்ஷேபம்

ஸ்ரீமதுபய வே. விஞ்சிமூர் K. தாதாசாரியர் ஸ்வாமி உத்யோகத்தில் ஓய்வு பெற்ற பின்பு சிலகாலம் திருவல்லிக்கேணியில் வாழ்ந்துவந்து ஒரு ஸம்வத்ஸரத்திற்கு மேலாக ஸ்வஸ்தானத்திலேயே (ஸ்ரீ வில்லிபுத்தூரிலே) வாழ்ந்து வருகிறார். சென்ற ஜூன் மாதத்திலிருந்து அவ்விடத்தில் பெரிய பெருமாள் கீழமாடவீதியில் (வைகுண்டவாஸி) ஸ்ரீமத் விஞ்சிமூர் கிருஷ்ணமாசாரியர் ஸ்வாமியின் திருமண்டபத்தில் ஸ்ரீவசனபூஷண காலக்ஷேபம் நடத்தியருளுகிறார். உபந்யாஸ ப்ரக்ரியையன்றிக்கே ப்ராசீன ரீதியில் மணவாளமாமுனிகளின் வியாக்கியான பங்க்திகளை ஸேவித்து ப்ரவசனம் செய்து வருகிறார். இதைத்தான் காலக்ஷேபமென்று முன்னோர் வழங்கிவந்தனர். ச்ரோதாக்கள் பலர் அந்வயித்து வருகின்றனர். இடையில் திருவாடிப்பூர மஹோத்ஸவம் ப்ராப்தமானபடியால் அப்போது நின்றிருந்த காலக்ஷபம் – திருத்தேர் நிலைசேர்ந்து சாத்துமுறையான பின் தொடர்ந்து வருகின்றது. *செல்வத்திருமாலா லெங்கும் திருவருள் பெற்றின்புறுவர். ... *

## பெரியார்களின் பெருமைப் பகுதி

### திருநாராயணபுர வித்வான்கள்

**ஸ்ரீமத் பண்டிதரத்னம் குப்பன் ஐயங்கார் ஸ்வாமி.**

ஸ்ரீமத் குப்பண்ணா ஸ்வாமி என்று ப்ரஸித்தரான இந்த ஸ்வாமி திரு நாராயணபுரத்தில் ஸம்ஸ்க்ருத கலாசாலையில் பலவாண்டுகள் அத்யக்ஷராக எழுந் தருளியிருந்து பற்பல வ்யக்திகளை நாநா சாஸ்த்ரங்களில் ப்ரவீணர்களாக்

யருளினர். சதுச்சாஸ்த்ர வித்வானுன இவர்க்கு ந்யாய வேதாந்தங்களில் மிக்க ப்ராவீண்ய மிருந்தது. எம்பெருமானுர் திருநாராயணபுரத்தில் எழுந்தருளி யிருந்த காலத்தில் ஸன்னிதி நிர்வாஹத்திற்காக ஐம்பத்திருவர் என்கிற ஒரு ஸமூஹத்தை நியமித்தருளினுரென்பது ப்ரஸித்தம். அந்த ஸமூஹத்தில் சேர்ந்த இந்த ஸ்வாமியும் ஸன்னிதியில் ஸ்தானிகம் என்கிற கைங்கர்யத்தையும் நடத்தி வந்தார். அனந்தாழ்வான் வாதங்களில் சிலவற்றுக்கு டீகை எழுதியிருக்கிருர்.

ஸ்ரீமத் தி. அ. அக்காரக்கனி ராமாநுஜாசாரியர் ஸ்வாமி.

திருநாராயணபுரத்தில் திருமலை அநந்தாண்பிள்ளை வம்சஸ்த்தர்களான பல பெரியோர்கள் அன்னுள் தொடங்கியே ஜ்ஞாநாநுஷ்டான ஸம்பன்னர்களாக விளங்கி வருகிருர்கள். இவர்களில் ஒருவரான ஸ்ரீ உ. தி. அ. ராமாநுஜாசாரியர் ஸ்வாமி என்பவர் உபய வேதாந்த பாரங்கதராய் தமது தமயனுர் ஸ்ரீமத் பாஷ்யா சார்யஸ்வாமியுடன் வடதேசத்தில் மாளவா மாரவாடம் குஜராத் ப்ராந்தங்களில் பலகாலும் ஸஞ்சரித்து ஸ்ரீவைஷ்ணவ ஸ்ரீயை அங்கெல்லாம் விசேஷமாக ப்ரசாரப் படுத்தி. உஜ்ஜயினியில் ஒரு ராமாநுஜகூடத்தையும் ஸ்தாபித்தருளினுர். இவருடைய குமாரரான ஸ்ரீ. தி. அ. ஸம்பத்குமாராசாரியர் (அடியேனுடைய பெரிய ஜாமாதா) M. A. பட்டம்பெற்று ந்யாய வேதாந்த சாஸ்த்ரங்களையும் அதிகரித்து காஞ்சியிலேயே நித்யவாஸம் செய்துகொண்டு அடியேனுடைய க்ரந்தமாலா கார்யாலயத்து வேலைகளை கவனித்து வருகிருர். இவருடைய குமாரன் சி. அநந்தாழ்வானும் அப்படியே உசாத்துணையாக இருந்து வருகிருன்.

ஸ்ரீமத் பண்டிதரத்னம் தி. அ. எம்பெருமானுர் ஸ்வாமி.

இந்த ஸ்வாமி ந்யாயவேதாந்த சாஸ்த்ரங்களில் ப்ரபல வித்வத் ஸார்வ பௌமராய் கலாசாலையில் பலவாண்டுகள் அத்யக்ஷராயிருந்து பல வித்யார்த்தி களை சாஸ்த்ரப்ரவீணர்களாக்கினுர். இவர் திருக்குமாரர்கள் ஸ்ரீ. தி. அ. நரஸிம்ஹா சார்யர், ஸ்ரீ. தி. அ. அநந்தாசார்யர், ஸ்ரீ. தி. அ. கேசவாசார்யர் என்கிற மூவரும் சிறந்த வித்வான்களாக விளங்கி வருகிருர்கள்.

ஸ்ரீமத் தி. அ. ஸ்ரீனிவாஸ கோவிந்தப்பங்கார் ஸ்வாமி.

இந்த ஸ்வாமி ஸாஹித்ய வேதாந்தங்களில் ப்ரவீணராய் விசிஷ்ய பகவத் விஷய ரஹஸ்ய வ்யாக்யானங்களிலும் வல்லவராய் கலாசாலையில் பலவாண்டுகள் உபாத்யாயராய் விளங்கி, பிறகு சென்னைமாநகரில் சிங்கம் செட்டி சாரிடியில் காலக்ஷேபம் ஸாதித்துக்கொண்டிருந்து, அதன் பிறகு உத்தமாச்ரமியாய் கோயில் ஸ்ரீ ரங்கநாராயண ஜீயர் மடத்தை அலங்கரித்தருளினுர். இவர் திருத்தம்பியார் மூத்த குமாரர் ஆழ்வார் திருநகரியில் ஸ்வீக்ருதராய் ஸ்ரீ.உ. இளையவில்லி சடகோபாசார்ய ரென்று ப்ரஸித்தராய் உபய வேதாந்தங்களிலும் ப்ரவீணராய், பிறகு ஸ்ரீரங்கத்தில் நித்யவாஸமாக எழுந்தருளி பல விடங்களில் ப்ரவசனங்களும் தர்சன நிர்வாஹமும் செய்து ஸ்ரீஸூக்தி ரத்னகரரென்று விருதுபெற்று விளங்கி வந்தார். (இவர்

அடியேனுக்கு ஸம்பந்தியாக அமைந்தார். இவருடைய மூற்ற குமாரர் ஸ்ரீ பூவராகன் என்பவர் சிறந்த வித்வானும் ப்ரவசன படுவும் ஆகி விளங்கி வருகிறார். ஷை கோவிந்தப்பங்கார் ஸ்வாமி தம்பியின் மற்றொரு குமாரர் ஸ்ரீ. உ. தி. அ சதாபி ஷேகம் கோவிந்த நரஸிம்ஹாசார்யர் உபயவேதாந்த ப்ரவசன நிபுணராய் கோயி லிலே நித்யவாஸம் செய்து வருகிறார்.

### ஸ்ரீமத். ஸ்ரீரங்கம் ஸம்பத்குமாரா சாரியர் ஸ்வாமி.

இந்த ஸ்வாமி தர்ம சாஸ்த்ரம் வேதாந்தம் முதலிய பல சாஸ்த்ரங்களைக் கற்று பலவாண்டுகள் கலாசாலையில் உபாத்யாயராக விருந்ததுமன்றி அருளிச் செயலிலும் பகவத்விஷய ரஹஸ்யாதிகளிலும் தேர்ச்சிபெற்றவராய் ஸன்னிதி கோஷ்டி கைங்கர்யத்திலும் பங்கு கொண்டு உபயவேதாந்த ப்ரவசனங்களும் செய்து வந்தார். இவருடைய இளைய குமாரரான ஸ்ரீ நரஸிம்ஹாசார்யர் திருத் தகப்பனாரைப் போலவே ஸகல யோக்யதைகளையும் பெற்று கலாசாலையில் அத்ய க்ஷராய் விளங்கி வருகிறார்.

### ஸ்ரீமத் ஜக்கு வெங்கடாசார்ய ஸ்வாமி.

இந்த ஸ்வாமி ஸாஹித்யம் ஸாங்க்யம் யோகம் உபய வேதாந்தங்கள் முதலான பற்பல கலைகளும் கற்று கலாசாலையில் பலவாண்டுகள் உபாத்யாயராய் விளங்கியதுமல்லாமல் ப்ரவசன கர்த்தாவாகவும் சிறந்த கவியாகவும் இருந்து வந்தார். பற்பல சிறந்த க்ரந்தங்களும் இயற்றியிருக்கிறார். இவருடைய மூத்த குமாரர் ஸ்ரீ ஜக்கு ஸுதர்சனாசார்யர் ஸாஹித்ய வேதாந்தங்களை யதிகரித்து மைசூர் ஸம்ஸ்க்ருத கலாசாலையில் பேராசிரியராய் விளங்கி வருகிறார்.

### ஸ்ரீமத் மண்டயம் ஆழ்வார் ஸ்வாமி

இந்த ஸ்வாமி ந்யாய வேதாந்தங்களில் சிறந்த வித்வான். விசேஷித்து பகவத் விஷய ஸாகரத்தில் நன்றாக ஆழ்ந்தவர். நல்ல வாக்மி. அடியேன் சிறிய வயதில் ஸ்ரீமத் ஜகத்குரு காதி ஸ்வாமியுடன் ஹைதராபாத் நகரத்திற்குச் சென்று ஸீதாராமபாக் என்கிற தோட்டத்தில் இருந்தபோது இந்த ஸ்வாமி அவ்வூரில் பலருக்கு காலக்ஷேபம் ஸாதித்துக் கொண்டு எழுந்தருளியிருந்ததால், அடிக்கடி ஸீதாராம பாகுக்கெழுந்தருளி ஸேவை ஸாதிப்பர். உபய வேதாந்தங் களிலும் ரஹஸ்யங்களிலும் நுட்பமான அனேக விஷயங்களை ஸாதித்தருள்வர். ஸ்ரீ காதி ஸ்வாமியின் உத்தரவினால் அடியேன் இவரிடம் மைஸூர் அனந்தாழ் வானுடைய ஸித்தாந்த ஸித்தாஞ்ஜநம் முதலிய சில வாதக்ரந்தங்களை நாலாறு மாதம் வாசித்தேன்.

### ஸ்ரீமத் மண்டயம் லக்ஷ்மீதாதாசார்யர் ஸ்வாமி.

ஷை ஆழ்வார் ஸ்வாமியின் திருக்குமாரரான இந்த ஸ்வாமி ந்யாய வேதாந் தங்களில் ப்ரசண்ட பண்டிதராய், தர்கதீர்த்தம் முதலிய விருதுகள் பெற்று கலா சாலை அத்யக்ஷராய் நாலாறு ஆண்டுகள் விளங்கி சிறுபிராயத்திலேயே பரம

பதித்துவிட்டார். இவர் திருக் குமாரர் ஸ்ரீ ஆழ்வார் திருமலை ஐயங்கார் என்பவரும் ந்யாய வேதாந்தநிஷ்ணுதராய் கலாசாலையில் பலவாண்டுகள் அத்யக்ஷராயிருந்து ஸமீப காலத்தில் பரமபதித்து விட்டார். இவர் குமாரர் ஸ்ரீமான் லக்ஷ்மீதாதாசாரியரும் சிறந்த வித்வானும் ஆங்கிலமும் கற்று பெங்களூர் கலாசாலையில் உயர்ந்த உபாத்யாய பதவியில் விளங்கி வருகிறார்.

ஸ்ரீமத் இயல்பிள்ளை வரதாசாரியர் ஸ்வாமி ஸாஹித்ய வேதாந்தங்களில் சிறந்த வித்வானாக, கலாசாலையில் பல காலம் உபாத்யாயராய் விளங்கி வந்தார். ஸ்ரீ பாஷ்யாதிகளையும் ப்ரவசநம் செய்து வந்தார். இவருடைய ஸதாசாரமும் விரக்தியும் வெகு ப்ரஸித்தமாயிருந்தது.

ஸ்ரீமத் புரோஹித திருநாராயண ஐயங்கார் ஸ்வாமி. இந்த ஸ்வாமி திருநாராயணன் ஸன்னிதியில் புரோஹித கைங்கர்ய மிராசு பெற்றிருந்தபடியால் இதையே குடிப்பெயராகப் பெற்றிருந்தார். தர்ம சாஸ்த்ரம், ஸாஹித்யம் வேதாந்தம் ஆகியவற்றில் மிக்க தேர்ச்சி பெற்று கலாசாலையில் உபாத்யாயராகவும் அத்யக்ஷராகவும் பல ஸம்வத்ஸரங்கள் விளங்கிப் பலரை வித்வான்களாக்கினார்.

ஸ்ரீமத் எம்பார் நரஸிம்ஹாசார்ய ஸ்வாமி ந்யாய வேதாந்த வித்வானும் க்ரமாந்தம் அத்யயநம் செய்தவரும் ஆகி பலவருடங்கள் கலாசாலையில் உபாத்யாயராகவிருந்து தற்சமயம் ஓய்வுபெற்று வருகிறார்.

ஸாஹித்ய வேதாந்தங்களில் ப்ரபல வித்வானாக எழுந்தருளியிருந்து சில வாண்டுகளுக்கு முன்பு பரமபதித்த ஸ்ரீமத் கோமடம் திருநாராயண ஐயங்கார் ஸ்வாமி, ஸ்ரீமத் வ்யாகரண வித்வான் (தி. அ.) ஸ்ரீநிவாஸாசாரியர் ஸ்வாமி, ஸ்ரீ. உ. திருவாய்மொழி ராமாநுஜாசார்யர் ஸ்வாமி. இவர் திருக்குமாரர், உயர்ந்த உபாத்யாய பதவியிலிருந்து தற்சமயம் விச்ராந்தராய் மைஸூரில் எழுந்தருளியிருக்கும் ஸ்ரீ. உ. திருநாராயண ஐயங்கார் ஸ்வாமி, ஸ்ரீமான் கவி ஜக்கு சிங்கராசார்யர், ஸ்ரீமான் கவி ஜக்கு ஆழ்வார் ஐயங்கார் முதலிய பல பெரியார்கள் அடிக்கடி நினைவுக்கு வருகிறார்கள்.

ஸ்ரீமத் கல்கி நரஸிம்ஹாசார்யர் ஸ்வாமி. தொண்டனூர் ப்ரதிவாதி பயங்கர வம்சஸ்த்தரான இந்த ஸ்வாமி, வேதாந்தவாதாவளிகாரராக ப்ரஸித்தராயிருந்த மஹாவித்வத் ஸார்வபௌமர் ஸ்ரீ மண்டயம் அநந்தாழ்வான் ஸ்வாமியின் பாகிநேயரென்று ப்ரஸித்தரான வித்வான். அநேக க்ரந்தங்கள் எழுதின மஹாகவி. பெங்களூரில் ஆங்கில கலாசாலையில் பெரிய பதவி வஹித்து வந்தார். திருவாய்மொழியாயிரத்தையும் அதிஸரள ச்லோகங்களாக்கி அச்சிட்டு வெளியிட்டிருக்கிறார். அதற்கு ஸஹஸ்ரகாதாரத்நாவளீ என்று பெயர். இவர் யோகாப்யாஸம் செய்து வருகையில் ஏதோ பிசகு நேர்ந்தது காரணமாக சிறிது சித்தப்ரமம் ஏற்பட்டு தம்மை கல்கியவதாரமென்று சொல்லிக் கொண்டிருந்ததனால் இவர்க்கு கல்கி நரஸிம்ஹாசார்யரென்றே ப்ரஸித்தி விளைந்தது.

திருநாரயணபுரத்தில் இவர்களையன்றி இன்னமும் பல வித்வான்களை அடியேன் நேரில் ஸேவித்தும், காதால் கேட்டும் இருக்கிறேன். ஆனால் அவர்களுடன் விசேஷமான பழக்கம் ஏற்படவில்லை யாதலால் அவர்களைப்பற்றி எழுத விரும்பவில்லை. (தொடரும்.) .... .... .... .... *

# பிள்ளைப்பெருமாள் பாசுரப் பகுதி

"வாழும் மவுலித்துழாய் மணமும் மகரக்குழைதோய் விழியருளும்
மலர்ந்த பவளத்திருநகையும் மார்விலணிந்த மணிச்சுடரும்
தாழுமுளரித் திருநாபித்தடத்துளடங்கு மணைத்துயிரும்
சரணகமலத் துமைகேள்வன் சடையிற்புனலுங்காணேனல்,
ஆழமுடைய கருங்கடலின் அகடுகிழியச் சுழித்தோடி
அலைக்குங்குடகாவிரி நாப்பண் ஐவாயரவில் துயிலமுதை
ஏழுபிறப்பிலடியவரை யெழுதாப் பெரியபெருமானை
எழுதவரிய பெருமானென்றெண்ணுதெழுதி யிருந்தேனே."

[திருவரங்கக் கலம்பகத்திலுள்ள பாசுரமிது]

திருமங்கையாழ்வார் கச்சிப்பதியில் அட்டபுயகரத்தம்மானை மங்களாசாஸனம் செய்யும்போது *ஓவிநல்லா ரெழுதிய தாமரையன்ன கண்ணும் ஏந்தெழிலாகமும் தோளும் வாயும், அழகியதாமிவரார் கொலென்ன அட்டபுயகரத்தே னென்ருரே* என்ருெரு பாசுரமருளினர். [ஓவிநல்லாரெழுதிய] சித்திரத்திலெழுதப்பட்டது போன்ற திவ்யாவயவங்களையுடையவர் என்றபடி. பெருமாளால் கொலையுண்ட வாலி உயிர் துறக்கும் சமயத்தில் பெருமாளைநோக்கிச் சில பேசுகிருன் — *அரக்க ரோரழிவு செய்து கருவரேல் அதற்குவேருேர் குரக்கினத்தரசைக் கொல்ல மனு நெறி கூறிற்றுண்டோ? இரக்கமெங்கு உகுத்தாய்? எனபால் எப்பிழைக்கண்டா யப்பா! பரக்கழியிது நீ பூண்டால் புகழையார் பரிக்கற்பாலார்?* என்று சொல்லி விட்டு, அதன்மேல் *கோவியல் தருமமுங்கள் குலத்துதித்தோர்கட்கெல்லாம், ஓவியத்தெழுத வொண்ணுவுருவத்தாய்! உடைமையன்ருே?* என்கிருன். [கம்ப ராமாயணம்] இதில் *ஓவியத் தெழுதவொண்ணுவுருவத்தாய்!* என்றது அற்புதமான வார்த்தை. சித்திரத்திலும் எழுத முடியாத வடிவுபடைத்தவனே! என்றபடி. *சித்ரே நிவேச்ய பரிகல்பித ஸத்வயோகா* என்ற காலிதாஸகவியின் வாக்கை யும் வென்றது. இவை நிற்க.

பிள்ளைப்பெருமாளையங்கார் போதுபோக்காக ஸ்ரீரங்கநாதனை ஓவியத் தெழுதிஞராம். என்னென்ன எழுதிஞரென்ருல், திருமுடியிலணிந்த திருத்துழாய் மாலையை யெழுதிஞாம்; கர்ணாந்தவிச்ராந்தமான திருக்கண்களை யெழுதிஞராம்; திருப்பவளத்தை யெழுதிஞராம்; திருநாபிக்கமலத்தை யெழுதிஞராம்; ஜடாதரக் கடவுள் பணியநின்ற சரணுரவிந்தங்களை யெழுதிஞராம். எழுதிவிட்டு, உற்று நோக்கிப் பல குறைகள் கண்டாராம். கண்டு, அந்தோ! சித்திரத்திலும் எழுத முடியாத பெருமாளை அறிவிலியான நான் எழுதிக்கெட்டேனே! என்று அநுத பிக்கிருர். ஐயங்கார் எழுதினதில் கண்ட குறைகள் எவையென்னில்; [வாழும் மவுலித்துழாய் மணமும்] திருமுடியில் திருத்துழாய் அணிந்திருப்பதாக எழுத முடிந்ததேயன்றி, கமகம வென்று அது மணம்வீசுவதை யெழுதமுடியவில்லையே

[மலர்ந்த பவளத்திருநகையும்] திருப்பவளத்தை ஒருவாறு எழுதினேனுகிலும் அபிமதஜநதர்சநானந்த வேகத்தாலே அர்ச்சாவதாரஸமாதியைக் கடந்து விம்மி வெளிவருகின்ற அவ்யக்த மதுரமந்தஹாஸ விலாஸத்தையெழுதமாட்டிற்றிலேனே! (மார்விலணிந்த மணிச்சுடரும்) *குருமாமணிப்பூண்குலாவித் திகழும் திருமார்பில் கௌஸ்துபமணி விளங்குவதாக எழுதினேனேயன்றி அந்தமணி வீசுகின்ற சுடர்ப் பெருக்கை எழுதமுடியவில்லையே! [தாழும் முளரித்திருநாபித் தடத்துளடங்கு மனைத்துயிரும்] திருநாபிக்கமலத்தை ஒருவாறு எழுதிவிட்டேனுயினும் அதற்குள் ளடங்கிய ஸகல சராசரங்களையும் சிறிதளவுகூட எழுதமாட்டிற்றிலேனே. [சரண கமலத்து உமைகேள்வன் சடையிற்புனலுங் காணேனல்] திருவடிவாரத்தில் சடைமுடி யண்ணல் பணிந்து நிற்பதை யெழுதினேனேயொழிய அவனது ஜடாமண்டலத்தில் பெருகும் ஸ்ரீபாததீர்த்தமான கங்கையின் வெள்ளத்தை எழுதமாட்டிற்றிலேனே! என்று அநுதபிக்கிறுராயிற்று. (இதில் மூன்றுமடியில் காவிரிநாப்பண் என்றது திருக் காவிரியாற்றின் நடுவே என்றபடி.) ... ... ... ... *

# திருப்பதித் திருநாமத் திருத்தங்கள்

(திருப்பக்குழி, தின்னனூர், திருவள்ளூர், திருவடந்தை, திருச்சானூர், ஆரம்முளை, திருமிற்றக்கோடு, திருப்பதிசாரம்.)

உலகவழக்கில் பலசொற்கள் சிதைவுற்றிருப்பதை அறிஞர் அறிவர். மண் வெட்டியை மமிட்டி யென்பது; திருமண்பெட்டியைத் திருமட்டியென்பது; திருமடைப்பள்ளியைத் திருமாப்பிடியென்பது. மறுதாரைபாய்வதை மடிசார் பாயறதென்பதாகப் பல சிதைவுகள் பேச்சில் வந்துள்ளன. இவற்றைப்பற்றிப் பிரமாதமொன்றுமில்லை. திவ்ய தேசத்திருநாமங்கள் பலவும் சிதைந்திருப்பது பற்றி அவசியம் தெளிவுபெறுத்த வேண்டியதாகிறது.

காஞ்சீப்ராந்தத்தில் திருப்புட்குழி என்றொரு திவ்யதேசம். ஜடாயுக்ஷேத்திர மென்பது ஸம்ஸ்கிருதப்பெயர். ஸ்ரீராமாவதாரத்தில் சக்ரவர்த்தி திருமகனர் ஜடாயுமஹாராஜரை ஸம்ஸ்கரித்த தலம் என்பது ஸ்தலபுராணவரலாறு. இது நாளடைவில் திருப்பக்குழியாய் விட்டது. காஞ்சீபுரத்திலிருந்து ராணிபேட்டை ஆற்காடு போகும்வழியில் திருப்பத்தில் இருக்கிறபடியாலும் பள்ளமான இடத்தி லிருப்பதாலும் திருப்பக் குழியென்று பெயராயிற்று என்று வியாக்கியானம் பண்ணுகிறுர்கள். பாமரஜனங்கள் இதுதான் அர்த்தமென்று நம்பிவிடுகிறுர்கள். திருநின்றவூர் என்பது தின்னனூராயிற்று. திருவெவ்வுளூரென்பது திருவள்ளூ ராயிற்று. வடமொழியில் கிம்க்ருஹ க்ஷேத்ரமெனப்படுகிறது. எவ்வுள்கிடந்தா னென்று ஆழ்வார்பாடல். திருவள்ளூர் என்னுதே திருவுள்ளூரென்றல் ஒருவாறு ஸாது வாகும். இடவெந்தையோடு திரு சேர்ந்தால் திருவிடவெந்தை யாகும். *இடவெந்தை யெந்தைபிரானே* என்பது ஆழ்வார்பாடல். திருப்பதி பக்கத்தில் தாயார் எழுந்தருளியிருக்கும் தலத்தை அலமேலுமங்காபுரம் என்று தெலுங்கர் வழங்கி வரு கிறர்கள். திருச்சானூர் என்று வழங்குகிறுர்கள் நம்மவர்கள். அது கொச்சை

யான வழக்கு. **சுகபுரீ** என்பது புராணவழக்கு. சுகமஹர்ஷி தவம் புரிந்த தலம் என்றபடி அதற்குச் சேரத் **திருச் சுகனூர்** என்பது ஸாதுவான வ்யபதேசம். சிரதானூர் என்றே ஸாமாந்ய ஜனங்களின் வழக்கு.

திருநாங்கூரைச் சேர்ந்த பதினொரு திருப்பதிகளுள் ஒன்றான திருத்தேவனார் தொகையைக் கீழச் சாலை யென்றே பெரியார்களும் வழங்கி வருகிறார்கள். திருத்தேவனார் தொகையென்கிற திருநாமத்தை அந்த ப்ராந்தத்திலுள்ளவர்களும் பலர் அறியார்கள். இதேபோல், ஆழ்வார்திருநகரியைச் சேர்ந்த நவ திருப்பதிகளுள் ஒன்றான வரகுணமங்கையைப் பெரியார்களும் **நத்தம்** என வழங்கிவருகிறார்கள். 'வரகுணமங்கைக்கு எப்படி வழி?' என்று எருகால் ஒரு பெரியவரைக்கேட்டேன்; 'அப்படியொருதலம் இந்தபக்கத்தில் இல்லையே, மலைநாட்டிலிருக்கக் கூடும்' என்றார் ஒரு ஸ்ரீவைஷ்ணவர். திருவிந்தளூரைத் திருவிழந்தூரென்றேவழங்கி வருகிறார்கள். மலைநாட்டில் மூன்று நான்கு திவ்யதேசங்கள் மலையாளர்களால் கொச்சையாக வழங்கப்பட்டு வருகின்றன. **திருவித்துவக்கோடு** என்பது திருமிற்றக்கோடு என்றும், **திருவாறன்விளை** யென்பது ஆரம் முளையென்றும், **திருவண்பரிசாரம்** என்பது திருப்பதிசாரமென்றும் **திருவல்லவாழென்பது** திருவல்லா யென்றும் வழங்கப்பட்டு வருகின்றது. இதனால் மலை நாட்டுத்திருப்பதி யாத்திரை செல்பவர்கள் மயங்கும் படியாகிறது.

ஸ்ரீகாஞ்சீபுரியில் உலகளந்தபெருமாள் ஸந்நிதியில் நீரகம் காரகம் கார்வானம் என்கிற மூன்று தலத்தெம்பெருமான்கள் (தனித்தனி ஸந்நிதிகளில்) ஸேவைஸாதிக்கிறார்கள். **ஊரகம்** என்பது உலகளந்தபெருமாள் ஸந்நிதியின் திருநாமம். (உரகம் என்பது வடசொல்; ஊரகம் என்று நீட்டல் பெற்றிருக்கின்றது.) ஆதிசேஷன் என்பது பொருள். ஆதிசேஷரூபியாக ஒரு முனிவர்க்குக் காட்சிதந்ததனால் இத்தலத்திற்குத் திருவூரகமென்று திருநாமமாயிற்று. திருநெடுந்தாண்டகத்தில் (8)*நீரகத்தாய்!* என்கிற பாசுரமொன்றில் இப்பெருமான்களுக்கு மங்களாசாஸனமுள்ளது. இதில் **பேரகத்தாய்!** என்றிருப்பது ஸ்ரீரங்கப்ராந்தத்தில் உள்ள அப்பக்குடத்தான் ஸந்நிதியென்று ப்ரஸித்தமான திருப்பேர்நகரைக் குறித்தபடி. பாசுரத்தில் '*காவிரியின் தென்பால் மன்னு பேரகத்தாய்*' என்று ஸ்பஷ்டமாகவே அருளிச் செய்யப்பட்டுள்ளது. அப்படியிருந்தும், இங்கு உலகளந்தபெருமாள் மிகப்பெரியதிருமேனி கொண்டு ஸேவைஸாதிப்பதனால் **பேரகத்தாய்!** என்று உலகளந்த பெருமாளை மங்களாசாஸனம் பண்ணினபடியென்று சிலர் சொல்லிப் போருவது அறியாமை.

திருப்பேர்நகர் என்பது சோழநாட்டுத் திருப்பதிகளுள் ஒன்றாக வழங்குவது போல, பாண்டிநாட்டிலும் ஆழ்வார்திருநகரியைச் சேர்ந்த நவதிருப்பதிகளுள் ஒன்றாக வழங்கப்பெறும். **தென்திருப்பேரை** என்பதே அது. ''திருப்பேரெயில்'' என்பது முழுத்திருநாமம். திருவாய்மொழியில் (7-3.) இத்தலத்திற்கு மங்களாசாஸனமான வெள்ளைச்சுரிசங்கு பதிகத்தில் நிகமனப்பாசுரமுட்பட பதினொரு பாசுரங்களிலும் *தென்திருப்பேரெயில்* என்றேயுள்ளது. (பேரையில்) என்று ஒரு பாசுரத்திலுங் கிடையாது **எயில்** என்கிற பதத்தைவிட்டு, நாகை நாங்கை, குடந்தை, அழுந்தை, தஞ்சை—இத்யாதிகள்போலப் **பேரை** எனவழங்குவது தவறன்று. ஆனால் ஆழ்வார் திருவாக்கில் **பேரை**யென்று ஓரிடத்திலும் வந்தது கிடையாது. மணவாளமாமுனிகள்

திருவாய் மொழி நூற்றந்தாதியில் இத்தலத்திற்கிட்டபாசுரத்தில் *தெள்ளியமால் தென்திருப்பேர் சென்றுபுக* என்றருளிச் செய்திருப்பதுகாண்க. இங்கு ''தென் திருப்பேரை சென்றுபுக'' என்றுபாடமாக்கினல் வெண்பாவுக்குச்சிறிதும் சேராது. நாலசைச்சீர் வேண்பாவில் பயிலாதே. அப்படிஎங்கும் பாடமும் இல்லே. ... *

## ஆசார்யஸூக்தி யநுபவப்பகுதி

எம்பெருமானுடைய பல திருக்குணங்களேத் திரட்டி ஆளவந்தார் ஒரே ச்லோகத்தில் அருளிச் செய்கிருர் ஸ்தோத்ரரத்னத்தில்; *வசீ வதாந்யோ குணவாந் ருஜு: சுசி: என்று தொடங்குவது அந்த ச்லோகம். அதில் க்ருதஜ்ஞ: என்பதும் ஒரு குணமாகப் பேசப்பட்டிருக்கிறது. செய்த நன்றியை மறவாதவனுக்கு க்ருதஜ்ஞனென்றுபெயர். மனிதர்களுக்கு உரிய குணங்களுள் இக்குணமே முதன்மை பெறும். ''எந்நன்றி கொன்ருர்க்கு முய்வுண்டாம் உய்வில்லே, செய்ந் நன்றி கொன்ற மகற்கு'' என்பது திருக்குறள். வடமொழியறநூல்களும் ''க்ருதக்நே நாஸ்தி நிஷ்க்ருதி:'' என்று அறைகின்றது. எல்லாப் பாவங்களுக்கும் ப்ராயச்சித்தங்களினுல் போக்கடியுண்டு: செய்ந்நன்றி மறக்கை அல்லது செய்ந்நன்றி கொல்லுகையாகிற பாவமொன்றுக்கு மாத்திரம் பிராயச்சித்தம் ஒரு சாஸ்த்ரத்திலும் காணக் கிடைக்காதென்றே வடநூலாரும் தமிழ் நூலாரும் ஒருமிடுருகக் கூறியுள்ளார்கள்.

இந்த க்ருதஜ்ஞதை நம்போன்ற மனிதர்கட்கு இருக்க ப்ராப்தம். எம்பெருமானுக்கு இக்குணமிருக்கவேண்டியது அவசியமோ? நாம் பரஸ்பரம் உதவிகளே அபேக்ஷித்திருப்பவர்களாகையாலே நம்முடைய உதவியைப் பிறர் மறவாதிருத்தலும் பிறருடைய உதவியை நாம் மறவாதிருததலும ஆவச்யகமாகும். நம்மாலே எம்பெருமானுக்கு ஆகவேண்டிய உதவி அணுவளவுமில்லே. அவன்ருன் அவாப்த ஸமஸ்தகாமனுகையாலே அவனுக்கு நாம்செய்யவேண்டுமுதவி என்ன இருக்கிறது? ஒன்றுமில்லே யென்பது புநருக்தம். ஆகவே அப்பெருமானே க்ருதஜ்ஞன் என்று கொண்டாடுவதற்கு விஷயமில்லேயே! விஷயமுள்ளதென்னில்; எம்பெருமான் நம் போல்வாரான க்ஷுத்ரர்களிடத்தும் உதவியை எதிர்பார்க்கக் கூடியவனென்று அவனுக்குக் குறையே தேறும். ஆதலால் அவனுக்குக் குணமாக சொல்லப்பட்ட க்ருதஜ்ஞதையை எங்ஙனம்நிர்வஹிப்பது? என்று சிலர் சங்கிப்பர்கள். ஆளவந்தார் பகவத்குணமாக அநுஸந்தித்த க்ருதஜ்ஞதையை நிர்வஹிக்கின்ற பூருவாசாரியர்கள் *ந ஸ்மரத்யபகாராணும் சதமபி ஆத்மவத்தயா, கதஞ்சிதுபகாரேண க்ருதேநைகேந துஷ்யதி* என்கிற ஸ்ரீராமாயண ச்லோகத்தைக் கொண்டு நிர்வஹித் திருக்கக்காண்கிருேம். இந்த ச்லோகமானது இராமபிரானுடையதான க்ருதஜ்ஞதா குணத்தை நன்கு வெளியிடுகின்றது. ஏதேனுமொருவிதத்தில் யாரேனும் ஒருதவி செய்தாலும் அதனல் இராமன் எப்போதும் உள்ளம் பூரித்திருப்பதாகவும், நூற்றுக் கணக்கான தீங்குகளிழைத்தாலும் அவற்றைச் சிறிதும் நெஞ்சிற் கொள்வதில்லே யாகவும் இந்த ச்லோகத்தில் ஸ்ரீராமகுணதிசயம் கூறப்பட்டுள்ளது. இதில் கதஞ்சித்

என்று முன்னம் ப்ரயோகிக்கப் பட்டுள்ள பதம் குறிக்கொள்ளத் தக்கது. உபகாரம் செய்யவேணுமென்கிற எண்ணத்தோடு செய்கையன்றியே அபுத்தி பூர்வகமாகச் செய்ததாயிருந்தாலும் அதையும் பேருதவியாகக் கொண்டு மகிழ்பவனும் இராமன். நெஞ்சாரவே நூற்றுக் கணக்கான தீங்குகள் செய்யினும் அவற்றை நெஞ்சிற் கொள்ளானும்.

ஆனால் இங்கு ஒன்று சொல்லவேண்டியதாகிறது; வெறிதேயருள் செய்வர்' என்று ஆழ்வாரருளிச் செய்தபடி ஒன்றுமே செய்யாதவர்கட்குங்கூட மிகச்சிறந்த அருளைச் செய்யுமியல்வினரான பெருமாள் ஒன்று செய்தவர்களுக்கு உகந்திருக்கிருரென்ருல் இது வியப்போ? இதுபாரட்டத்தக்கதொரு குணமாகுமோ?' ஆகாதுதான். ஆனாலும் இராமன் தன்னை ஒரு மனிதனாக நடித்துக் காட்டினனாதலால் 'உலகில் மனிதர்களிடத்துக் காணும் குணங்களெல்லாம் இராமபிரானிடத்து உள்ளன' என்று காட்டவேண்டுவது ப்ராப்தமாகிறபடியால் அந்தமுறையில்காட்டலாமன்ருே?

கேண்மின்; குராக்கரசனான ஸுக்ரீவனிடத்திலும் அரக்கர் கோமானை வீபீடணனிடத்திலும் இராமபிரான் காட்டியருளின திருவருள் வாயால் சொல்ல வொண்ணாதது, நெஞ்சாலும் நினைப்பரிது. இதற்கீடாக அவர்கள் செய்த நன்றி யாதென்று பார்க்குமளவில், விபீஷணன் சரணாகதி செய்தானென்ருவது சொல்லத் தக்கதுண்டு. ஸுக்ரீவனிடத்திலோ, *லோகநாத: புரா பூத்வா ஸுக்ரீவம் நாத மிச்சதி* என்றும் *ஸுக்ரீவம் சரணம் கத:' என்று முள்ள பிரமாணங்களின்படி இராமன் ஸுக்ரீவனைச் சரணம் புக்கதாகக் காண்கிருேமே யல்லது ஸுக்ரீவன் இராமனைச் சரணம் புக்கதாக இல்லை, ஆனாலும் இராமபிரானது திருவுள்ளத்தினால் ஸுக்ரீவன் பேருதவி செய்தானாகக் கொள்ளப்பட்டான். அவ்வுதவி யாதெனில்; இராமன் பிராட்டியைப் பிரிந்து மிகவருந்தி இன்னது செய்வதென்று தோன்ருமல் சென்று கொண்டிருக்கையில் 'பம்பாதீரே ஹநுமதா ஸங்கதோ வாநரேண ஹ* என்னும்படி பம்பைக்கரையில் அனுமன்வந்து சந்தித்தனனன்ருே. இதுஸுக்ரீவனது கட்டளையினால் தானே நிகழ்ந்தது. அனுமன் இராமனிடம் வந்து சேர்ந்ததும் 'நான் ஸுக்ரீவனால் அனுப்பப்பட்டு இவ்விடம் வந்தேன் உங்களைக்காண' என்றே சொல்லி யிருக்கின்றனன். இத்தகைய மஹாகுணசாலியான திருவடியை யனுப்பினது ஸுக்ரீவன் தன்னுடைய காரியத்திற்காக வாயினும், இராமன் அங்ஙனம் கொள்ளாது அதனைத் தனக்குச் செய்த பேருதவியாகக்கொண்டே [அதாவது, தனக்கு உசாத்துணை யனுப்பிவைத்ததாகக் கொண்டே] ஸுக்ரீவனிடத்தில் பேரருள புரிந்தனன்.

இப்படி கதா ஸந்தர்ப்பங்களைக் கொண்டு இராமபிரானிடத்திலே நாம் க்ருதஜ்ஞதா குணத்தை நிரூபித்துக் காட்டுவது இருக்கட்டும். ஆளவந்தார் *வசீ வதாந்ய;* என்கிற ச்லோகத்தில் அநுஸந்தித்த திருக்குணங்கள் பரந்தாமனான ஸ்ரீமந்நாராயண மூர்த்தியிடத்தே யாதலால் அக்குணங்களுள் ஒன்ருன க்ருதஜ்ஞதையை ஒன்ருன ஸ்ரீமந்நாராயண மூர்த்தியிடத்திலேயே நிரூபித்துக் காட்டவேணும். அதை நம் ஆசாரியர்கள் நிரூபிக்கும் விதம் மிகவும் ஆச்சரிய மானது. அதனைவிவரிப்போமினி.

**க்ருதஜ்ஞ:** என்னும் சொல்லானது (க்ருதம் ஜாநாதீதி க்ருதஜ்ஞ:) என்கிற வ்யுத்பத்தியின் படி, செய்கிற காரியங்களை யுணருபவன் என்று பொருள் பெறும். சேதநர்களாகிய நாம் செய்கிற காரியங்களை யுணருபவர் பகவான் என்றதாயிற்று. அனந்த கோடி ஜீவராசிகள் ஒவ்வொரு க்ஷணத்திலும் செய்யுங்காரியங்களை எம்பெருமான் தனது சிறந்த சக்தி விசேஷத்தினால் உடனிருந்து அறிகிறானென்பது ஆச்சரியப் படத் தக்க விஷயமன்றே. அதையா இங்குச் சொல்லுகிறது? என்னில்; கேண்மின்.

ஸர்வேச்வரன் நம் போன்ற சேதநர்களைத் தன்னருளுக்கு இலக்காக்கிக் கொள்வதற்கு உறுப்பாக நாம் செய்ய வேண்டிய காரியங்களை சாஸ்திரங்களில் பலவாறு சொல்லிவைத்திருக்கிறானென்பதை யாவருமறிவர். அவற்றுக்கு ஸுக்ருதமென்று பொதுவான பெயர் வழங்கும் 'நன்றாகச் செய்யப்பட்டது' என்பது இதன் பொருள். நாம் செய்யும் காரியங்களில் நன்றாக செய்யப்படுவதும் தீதாகச் செய்யப்படுவதுமாக இரண்டு வகைகள் உள்ளனவன்றே. அவை வடமொழியில் ஸுக்ருத, துஷ்க்ருத பதங்களாலும், தென்மொழியில் நல்வினை தீவினை யென்னுஞ் சொற்களாலும் வழங்கப் பெறும். ஸுக்ருதத்தைப் பற்றியே இங்குப் பேசுவோம். இது பொதுவாக இரு வகைப் படும்—ஜ்ஞாதஸுக்ருதமென்றும் அஜ்ஞாதஸுக்ருதமென்றும். மனப்பூர்வமாகத் தெரிந்துசெய்யும் நன்மைகள ஜ்ஞாதஸுக்ருதமெனப்படும். நமக்குத் தெரியாமல் விளையும் நன்மைகள் அஜ்ஞாதஸுக்ருத மெனப்படும். இவற்றுள் முதல் வகுப்பான ஜ்ஞாதஸுக்ருதங்கள் பல பலவாயிருக்கும். தவம் புரிவது, தானஞ் செய்வது, யஜ்ஞயாகங்களைச் செய்வது, கங்கை யமுனை கவேரி முதலிய புண்ணிய தீர்த்தங்களிற் சென்று குடைந்தாடுவது. கோயில் திருமலை பெருமாள் கோயில் திரு நாராயணபுரம் முதலான திவ்ய தேசங்களிற் சென்று பகவத் ஸேவை செய்வது, 'பேராயிரமு மோதுமின்கள்' என்கிற கட்டளைக்கு உட்பட்டு ஸஹஸ்ரநாமம் முதலான துதிகளை வாயாரச் சொல்லுவது. திருவிளக்கெரிக்கை திருமாலையெடுக்கை யென்று சொல்லப்படுகிற பல வகைக் கைங்கரியங்களைச் செய்வது...ஆகிய இப்படிப்பட்ட காரியங்களை 'இது செய்யக்கடவோம்' என்று ஸங்கல்பித்துக் கொண்டு மனஸ் கரித்துச் செய்வதானது ஜ்ஞாதஸுக்ருத மெனப்படும்.

கீழே சொன்னபடி இன்ன நல்வினையைச் செய்யவேணுமென்று நாம் ஸங்கல்பித்துக் கொண்டு செய்யாவிடினும் கோல் விழுக்காட்டாலே நல்வினையாகப் பரிணமிக்கும் செய்கைகள் அஜ்ஞாதஸுக்ருதமெனப்படும். நல்லது செய்ய வேணுமென்று நாம் நினைத்துச் செய்யாதவற்றை ஸுக்ருதமென்கிற சொல்லால் வழங்கலாமோ? சாஸ்த்ரங்களினால் விதிக்கப்பட்டதாய் கர்த்தாவான சேதநனாலே புத்திபூர்வமநுஷ்டிக்கப் பட்டதான செய்கையையன்றே ஸுக்ருதமென்று வழங்கலாம். இன்ன ஸுக்ருதம் பண்ணினேனென்று கர்த்தாவான சேதநன் அறியாதவற்றை ஸுக்ருதமென்று எப்படிச் சொல்லக்கூடும்? என்று ஆக்ஷேபிக்க இடமுண்டு; இதற்கு நம் பூருவாசாரியர்கள் அருளிச் செய்யும் ஸமாதானத்தையே இங்குத் தெரிவிக்கிறோம். ஸ்ரீவசநபூஷணத்தில் பகவந் நிர்ஹேதுக க்ருபாவைபவப்ரகரணத்தில் (396)

'சாஸ்த்ரமும் விதியாதே நாமுமறியாதே யிருக்கிற வித்தை ஸுக்ருதமென்று நாம் பேரிடுகிறபடி யென்னென்னில்; நாமன்று, ஈச்வரனென்று கேட்டிருக்கையாயிருக்கும்'' என்றுள்ளது.

நம்மையறியாமல் நேர்ந்த நல்வினைக்கு ஸுக்ருதமென்று பேரிடுகிறது நாமன்று; ஸர்வமுக்திப்ரஸங்கம் வாராமைக்காக ஸர்வஜ்ஞன ஸர்வேச்வரன் தாள் ஸுக்ருதமென்று பேரிட்டு வைத்தான் என்று ஆசாரியர்கள் அருளிச் செய்வர்களாம். இதனால் என்ன தேறுகிறதென்னில்; நமக்குத் தெரியாததாயிருந்தாலும் எம்பெருமானுக்குத் தெரிந்திருக்கையாலே அவன் கருத்தாலே ஸுக்ருதமென்னக் குறையில்லை என்றதாயிற்று.

இதற்கு மேல் ஒரு கேள்வி பிறக்கும். எம்பெருமானோ யதார்த்தஜ்ஞானமுள்ளவன். அவனுக்கு அந்யதாஜ்ஞான விபரீத ஜ்ஞானங்கள் கிடையாதென்று சாஸ்த்ரங்களாலறிகிறோம். நாம் மனஸ்கரித்துச் செய்யாத தொன்றை அவன் ஸுக்ருதமென்று கொண்டானாகில் அது யதார்த்த ஜ்ஞானமாகுமோ? ஒருவன் ஸந்நிபாத ஜ்வரம் முதலியகொடிய நோய்களினால் துன்பப்படுங்காலங்களில் தன்னையறியாமல் ஏதேதோ உளறுகிறான்; அபுத்திபூர்வமாக வெளிவருமந்த வுளறல்களில் யாராவது அர்த்தம் காண்கிறார்களோ? இல்லையன்றோ. அப்படியே நம்மையறியாமல் நாம் செய்யும் செயல்களை எம்பெருமான் ஸுக்ருதமென்று எப்படிக் கொள்ளககூடும்? என்று.

கேண்மின்; எம்பெருமான் சேதநர்களிடத்தில் இயற்கையான இன்னருள் பொருந்தியவன். இவனை எவ்வகையினாலாவது தான் அங்கீகரிப்பதற்கு அப்பெருமான் வழிதேடுபவன். இச்சேதநன் புத்தி பூர்வமாகச் செய்யும் நல்வினைகளை முன்னிட்டே இவனை அங்கீகரிப்பதாக எம்பெருமான் வைத்துக் கொண்டால் ஒருவனைக்கூட அங்கீகரிக்க அவகாசம் நேராது. ஏனெனில், நாம் புத்தி பூர்வமாகச் செய்வது தீவினைகளையேயாதலாலும் நல்வினையை நாம் நெஞ்சாலும் நினைப்பவர்களல்லோமாதலாலும் நம்மை அங்கீகரிக்க எம்பெருமானுக்கு அவகாசமேது? நாமும் இழந்து அவனும் இழந்து போக வேண்டியதாகிறது. நம்முடைய இழவு கிடக்கட்டும். இழந்தோமென்கிற இழவுமின்றிக்கேயிருக்கிற நாம் நம்மிழவைப் பற்றிக் கவலைப்படாதொழிந்தாலும் ஸொத்துக்கு உடையவனாய் ஸ்வாமியென்று பேர்பெற்றிருக்கு மெம்பெருமான் இழந்து தரிக்க மாட்டானன்றோ. 'ஸுக்ருதம் செய்தவர்களையன்றி மற்றையோரை நான் அங்கீகரிக்கமாட்டேன்' என்று சாஸ்த்ரங்களில் அவன் பொறித்து வைத்திருப்பதனால் ஸுக்ருதம் செய்யாதவர்களை அங்கீகரிக்க முடியாமலிருக்கிறது ஆகவே எம்பெருமான் இழந்தேபோக வேண்டியதாகிறது. இழவாமைக்காக அப்பெருமான் ஒரு கள்ளவழியில் நுழைகிறான் (அதாவது) கரண களேபரங்களைப் பெற்றிருக்கிற சேதநன் வாளாகிடப்பதில்லை; ந ஹி கச்சித் க்ஷணமபி ஜாது திஷ்டதி அகர்மக்ருத் என்று கீதையில் சொன்னபடி எப்போதும் ஏதாவதொரு காரியம் செய்து கொண்டே போதைப் போக்கிவருகின்ற சேதநன் செய்யும் காரியங்களிலே நாம் நன்மை (ஸுக்ருதம்) என்று பேரிட்டுக் கொள்ளும்படியான காரியம் ஏதாவதிருக்குமாவென்று பார்ப்போம்-என்று ஆராயத் தொடங்குகிறான். அவனுடைய அத்ருஷ்டத்தாலே அப்படிப்பட்ட காரியங்கள் நம்மிடத்

திலே அவனுக்குக் கிடைத்துவிடுகின்றன, அவற்றை ஸுக்ருதமாகவே அவன் திருவுள்ளம் பற்றுகிறுன். நாம் மனப்பூர்வமாக ஸுக்ருதமென்று செய்யாததாகையாலே அஜ்ஞாதமென்கிறது. அவன் திருவுள்ளத்தாலே இது ஸுக்ருதமாகக்கொள்ளப்பட்டுவிட்டபடியால் ஸுக்ருதமென்கிறது. ஆகவே அஜ்ஞாதஸுக்ருதமென்று பேர் பெற்றுவிட்டது,

இந்த அஜ்ஞாதஸுக்ருதமானது—யாத்ருச்சிகஸுக்ருதமென்றும் ஆநுஷங்கிக ஸுக்ருதமென்றும் ப்ராஸங்கிக ஸுக்ருதமென்றும் பல பெயர்களை யுடையதாயிருக்கும். இவை நம்போல்வாரிடமிருந்து எம்பெருமானுல் எவ்விதமாகக் கொள்ளப்படுகின்றன வென்பதைச் சிறிது நிரூபிப்போம். நாம் ஸம்ஸாரிகளாகையாலே மக்களைப் பெறுகிறேம். மகளை ஒருவனுக்கு மணம் புரிவிக்க வேண்டியதாகிறது. மகனுக்கு ஒரு பெண்ணைக்கொள்ள வேண்டியதாகிறது. ஆகவே ஸ்ரீரங்கத்திலுள்ள ஒரு வரனுக்குத் தன் மகளைக் கொடுக்கவும், திருவெள்ளறையிலுள்ள வொரு பெண்ணைத் தன்மகனுக்குக் கொள்ளவும் நேருகிறதென்று வைத்துக்கொள்ளுங்கள். இந்த ஸம்ஸாரி அடிக்கடி வாய்ப் பேச்சுக்களில் ஸ்ரீரங்கத்தையும் திருவெள்ளறையையும் வாயாரச்சொல்லவேண்டி வருகிறது. "என்னுடைய மாப்பிள்ளை ஸ்ரீரங்கத்திலிருக்கிறர்-ஸ்ரீரங்கத்திலிருந்து என்னுடைய மாப்பிள்ளை நேற்றுவந்தார்—மாப்பிள்ளையை யழைத்துவர ஸ்ரீரங்கம் போய் வரப் போகிறேன்; என்னுடைய நாட்டுப்பெண் திருவெள்ளறையிலிருந்து இன்றுவந்தாள்" என்றிப்படி பலகால் வ்யவஹரிக்க நேர்கின்றது. இந்த வ்யவஹாரங்களில் திருவரங்கத்தையும் திருவெள்ளறையையும் பலகால் சொல்லுவதானது 'இந்த திவ்ய தேசங்களை நாம் சொன்னுல் ஸுக்ருதமுண்டு' என்கிற எண்ணத்தினுலன்று; அம்பத்தூர் ஆவடி என்கிற ஊர்ப்பெயர்களைச் சொல்லுவது போலவே திருவரங்கம் திருவெள்ளறையென்னுமூர்ப் பெயர்களையும் இவன் சொல்லா நின்றுன். ஆனுலும் ஏதேனுமொரு வியாஜத்தை எதிர்பார்ப்பதில் நோக்குடையனுன எம்பெருமான் 'என்னூரைச் சொன்னுனிவன்' என்று இதை யொரு ஸுக்ருதமாகக் கணக்கிடா நின்றுன்.

மற்றுங்கேண்மின்; ஸம்ஸாரிக்குப் பிறக்கும் மக்களுக்கு ரங்கன் ராகவன் திருவேங்கடன் கோவிந்தன் கோபாலன் நாராயணன் மாதவன் என்றிட்டபடி பெயரிட்டு அந்தப் பிள்ளைகளை ஆர்வத்தோடு அழைக்கும் போதெல்லாம் இந்தப் பெயர்களைச் சொல்லியழைக்க நேர்கின்றது. தவிரவும் வாய்ப் பேச்சுக்களில் ரங்கன் வந்தான், ராகவன் போனுன், க்ருஷ்ணனைக் கண்டேன், ராமனேடு பேசினேன், என்றிப்படி பலகாலும் சொல்ல நேருகின்றது. எம்பெருமானுடைய திரு' நாமங்களைச் சொல்லுகிறேமென்கிற எண்ணம் சிறிது மில்லாமல் இங்ஙனே நிகழும் ஸம்ஸாரிகளின் வ்யவஹாரங்களில் 'என்பெயரைச் சொன்னுனிவன் என்று எம்பெருமான் இதையொரு ஸுக்ருதமாகக் கணக்கிடா நின்றுன்.

சில பாகவதர்கள் திருவேங்கடயாத்திரையாக வழி நடந்து செல்லா நிற்கையில் கள்ளர்கள் அவர்களை யடித்துப் பொருள்களை யபஹரிப்பதாக அணுகினுர்கள்; அதே சமயத்தில் சில ராஜஸேவகர்கள் தங்களுடைய காரியமாக ஆயுதங்களைத் தாங்கிக்கொண்டு அவ்வழியே அவர்கள் பின்னுல் வந்து கொண்

டிருப்பதைக் கள்ளர்கள் கண்டு, இவர்கள் இந்த பாகவதர்களுக்குத் திருமேனிக் காவலாக வருகின்றார்கள் போலும், இங்கு நம்முடைய எண்ணம் ஒன்றும் நிறைவேறாது, என்றெண்ணி வாளா விலகியொழிந்தனர். இந்த நிகழ்ச்சி அங்கு யாத்ருச்சிகமாகவந்த ராஜஸேவகர்களுக்கும் தெரியாது. யாத்திரை செல்லுகின்ற பாகவதர்களுக்கும் தெரியாது; ஆனாலும் அங்கீகரிக்க அவகாசம் பார்க்கிற ஸர்வேச்வரன் அந்த ராஜஸேவகர்களை பாகவதரக்ஷணம் பண்ணின ஸுக்ருதிகளாகத் திருவுள்ளம் பற்றுகிறான். அந்த ராஜஸேவகர்கள் அந்த பாகவதர்கள் சென்ற வழியில் சென்றதுதன்னையே ஒரு ஸுக்ருதமாகக் கணக்கிடா நின்றான்.

ஒருவன் ஓரிடத்திலே நிலம் வாங்கி அதிலே வெங்காயம் உள்ளி முதலானவற்றைப் பயிர் செய்கின்றான். தண்ணீரிறைக்க அங்கே ஸௌகரியமில்லாமையால் நெடுந்தூரத்திலே நீருள்ளவிடத்தில் துலையிட்டு, தன் வயலிலே வந்து சேரும்படி தண்ணீரிறைக்கின்றான். அந்தநீர் ஒரு பெரிய வாய்க்காலாகப் பெருகி வயலுக்குச் செல்லாநின்றது. யாத்திரை செல்கின்ற சில பாகவதர்கள் தாபார்த்தர்களாய் தாஹம் மிகுந்து எங்கும் தண்ணீர் கிடைக்காமல் வருந்தி வருகையில் இந்தத் தண்ணீர்ப் பெருக்கைக்கண்டு பரமானந்தங்கொண்டு காலுங்கையும் முகமுங்கழுவி விடாய் தீர்ந்து வாழ்த்திச் சென்றார்கள். நெடுந்தூரத்தில் துலையிட்டுத் தண்ணீரிறைக்கின்ற அவன் இதைச்சிறிது மறியாதவனாயிருந்தாலும் ஸர்வஜ்ஞனான எம்பெருமான் 'என்னடியார்களது விடாயைத் தீர்த்தானிவன்' என்று கொண்டு இதையொரு ஸுக்ருதமாகக் கணக்கிடாநின்றான்.

ஒரு தனிகன் தான் சூது சதுரங்கமாடுவதற்காக ஒரு சாவடி கட்டி அதிலே சூதாடிக் காலங்கழிக்கிறான். ஆனால் இரவு முழுதும் சூதாடிக் கண் விழித்திருக்க முடியாதே. நடுநிசி வரையில் சூதாடி விட்டு உறங்குவதற்கு வீடுபோய் விடுகிறான். அப்போது, யாத்திரையாக வழி நடந்து வருகின்ற சில பரமபாகவதர்கள் தாங்கள் சயனிப்பதற்கு இடம் கிடைக்காமல் வருந்தியிருந்து இந்தச் சாவடியிலே யொதுங்க நேர்கின்றது. இப்படி ஒரு நாளல்ல; நாடோறும் நேர்கின்றது. இதை அந்தத் தனிகன் அறியான்; அறிந்தானாகில் ஒருவரும் உள்ளே புகாதபடி கதவுகளிடவும் ஏற்பாடு செய்திடுவன். இங்ஙனே சில பாகவதர்கள் தங்கிப் போகிறார்களென்பதை அவனறியாமையாலே க்ஷேமக்காப்பு செய்யப்படாமாலிருந்து யாத்திரை செய்வார்க்குப் பேரின்பமளிக்கும் வசதியாக இருந்து வருகின்றது. இது எம்பெருமான் திருவுள்ளத்திலே பட்டு 'என்னடியார்க்கு ஒதுங்க நிழலைக் கொடுத்தானிவன்' என்று ஸுக்ருதமாகக் கணக்கிடலாகிறது.

ஒருவன் கோஹத்திபண்ணியே ஜீவிக்குமியல்வினன். அவன் ஒருநாள் ஒரு பசுவைக் கண்டு அதைப் பிடித்துக் கொல்ல முயன்று தொடரத் தொடங்கினான். இதையறிந்த அந்தப் பசு அஞ்சியோடத் தொடங்கிற்று. இவனும் விடாது அதைத் தொடர்ந்து ஓடுகிறான். பசு ஓடும் வழியில் ஒரு பெருமாள்கோவில் இருந்தது. அதன் வலமாக ஓடிற்று அந்தப் பசு. இந்தக் கிராதகன் அதைத் தொடர்ந்துபிடிக்க வேண்டியதற்காகத் தானும் அந்தக் கோவிலை வலஞ் செய்வானாய் ஓடுகிறான். ஒரு பகவதாலயத்தை வலஞ் செய்கிறோமென்கிற எண்ணம் அவனுக்கில்லை. கோவிலை

வலஞ் செய்வது ஸுக்ருதமென்கிற அறிவுமில்லை யவனுக்கு. ஆனாலும் ஆள்பார்த்துத் திரியுமெம்பெருமான் 'இவன் என் கோவிலை வலஞ்செய்தான்' என்று இதை யொரு ஸுக்ருதமாகக் கணக்கிடா நின்றான்.

இங்ஙனே பல நிகழ்ச்சிகள் ஸம்ஸார வாழ்க்கையில் ஸம்பவிப்பவையுள. இவையே அஜ்ஞாதஸுக்ருதமெனப்படுவன. மேலே நிரூபிக்கப்பட்டவற்றில் யாத்ருச்சிக ஸுக்ருத கோஷ்டியில் சேர்வன சில; ஆநுஷங்கிகஸுக்ருத கோஷ்டியில் சேர்வன சில. ஆக இப்படிப்பட்ட ஸுக்ருதங்களை எம்பெருமான் தானாக அறிந்து நம்மை விஷயீகரிப்பதற்கு இவற்றை ஹேதுவாகவோ வியாஜமாகவோ கொள்ளுகிறானென்று இது தன்னையும் நாம் சாஸ்த்ரங்கொண்டேயறிகிறோம். இப்படிப்பட்ட ஸுக்ருதஜ்ஞானம் எம்பெருமானுக்கு உள்ளது பற்றியே அவனுக்கு க்ருதஜ்ஞன் என்னும் புகழ் தோன்றியது. ஆளவந்தார் *வசீ வதாந்ய:* என்னும் ச்லோகத்தில் க்ருதஜ்ஞ: என்று கூறியது இவ்வளவு விஷயங்களைத் திருவுள்ளம் பற்றியே.

வால்மீகி பகவான் இராமனைப் பற்றிச் சொல்லுமிடத்து "கதஞ்சிதுபகாரேண க்ருதேநைகேந துஷ்யதி'' என்றதில் கதஞ்சித் என்றது இவ்வளவு பொருள்களையும் உட்கொண்டிருக்கும். கதஞ்சித் க்ருதேந ஏகேந உபகாரேண துஷ்யதி—கதஞ்சித் கரணமாவது என்ன? என்று விமர்சிக்க வேணும். மநஸ்கரித்துச் செய்யாமல் கீழ் நிரூபித்தவகைகளிலே செய்வதே கதஞ்சித் கரணமென்க.

விபீஷண பரிக்ரஹ விஷயமான விவாதங்கள் தீர்ந்து அவனைத் தன்னிடம் அழைத்து வரும்படி பெருமாள் ஸுக்ரீவனுக்குக் கட்டளையிட்டுச் சொல்லும்போது *ஆநயைநம் ஹரிச்ரேஷ்ட தத்தமஸ்யாபயம் மயா* என்றார். ஸுக்ரீவ! விபீடணனுக்கு நாம் அபயமளித்தோமாதலால் அவனை நீயே யழைத்து வா என்று சொல்லி, உடனே *விபீஷணோ வா ஸுக்ரீவ யதி வா ராவண: ஸ்வயம்* என்றார். இதன் பொருளாவது, ஸுக்ரீவ! நம்மை அடைக்கலம் புகுவதாக வந்து நிற்பவன் விபீஷணனென்று நீங்கள் சொல்லுவதனால் அவனை யங்கீகரித்ததாகச் சொன்னேன்; ஒருகால் விபீஷணனல்லாமல் இராவணனே அவனது வேடம் பூண்டு வந்திருப்பதாகத் தெரியவந்தால் அவ்விராவணனை அங்கீகரிப்பதாவென்று மறுபடியும் ஒரு விசாரம் வைத்துக் கொள்ளாமல் அவனையே தாராளமாக அழைத்து வா என்றபடி. இங்ஙனம் தம்முடைய உதாரமான திருவுள்ளத்தைக் காட்டுகின்ற பெருமாள் இராவணனிடத்தில் என்ன ஸுக்ருதங்கண்டு இந்த வார்த்தை சொன்னாரென்று ஆராயுமளவில், மஹாபாபியான அவ்விராவணனிடத்தில் புத்தி பூர்வமான ஸுக்ருதம் காணமுடியாமற் போனாலும் மேலே விவரித்தவகையில் யாத்ருச்சிகம் முதலிய ஸுக்ருதங்கள் காணநேரு மென்கிற துணிவு கொண்டே அங்ஙனமருளிச் செய்யலாயிற்றென்று நம் ஆசாரியர்கள் திருவுள்ளம் பற்றுகிறார்கள். இவ்வகைகளை நன்கு விமர்சிக்குங்கால் எம்பெருமானே ப்ராப்தா வென்று சொல்லலாம் படியிருக்கும். தன் சொத்தைச் சோரவிடாமல் தான் ப்ராபிக்குமவனென்கை *

# ஸ்ரீ காஞ்சியில் மாலோலவித்வத் ஸதஸ்ஸின் மஹிமை

ஸ்ரீமத் பரமஹம்ஸேத்யாதி. ஸ்ரீ அஹோபில மடாதிபதிகளான ஸ்ரீமத் அழகிய சிங்கர் ஸ்வாமிகள் நேற்று ஆடிமாதத்துப்பௌர்ணமிக்கு முன்னுகைக் காஞ்சிக்கு எழுந்தருளியானதையும், சாதுர்மாஸ்ய ஸங்கல்ப மஹோத்ஸவம் சிறப்புற நடைபெற்றதையும், ஸ்ரீ ஸ்வாமியின் திருநக்ஷத்ரமஹோத்ஸவத்தை முன்னிட்டு 10 நாள் வித்வத்ஸதஸ்ஸு நடக்கப்போகிறதென்பதையும் ஏற்கெனவே ஸ்ரீராமாநுஜன் தெரிவித்துள்ளது அழகிய சிங்கரின் திருவவதார நக்ஷத்ரம் ஆவணி ஹஸ்தமாதலால் ரோஹிணி முதலாக மாலோல வித்வத்ஸதஸ்ஸு நடைபெற்று வருகின்றது. நாடோறும் காலை வேளைகளில் 9 மணிமுதல் 11 மணி வரையிலும், பிற்பகலில் 3 மணிமுதலாக 6 மணிவரையிலும் ஸதஸ்ஸு நடைபெற்று வருகின்றது. 8—9—75 திங்கட்கிழமை ஹஸ்த நக்ஷத்திரத்தன்று ஸதஸ்ஸமாப்தியாகும். ஸதஸ்ஸின் பெருமை உண்மையாக மிகமிகக் கொண்டாடிக் கூறத்தக்கதாகும். இன்று (6—9—75) ஸதஸ்ஸுக்கு எட்டாவது நாளாகும். 10—9—75 புதன்கிழமையன்று இவ்விதழ் வெளிவரவேண்டிய நாளாதலால் திருநக்ஷத்ரத்தின் வைபவங்களையும் சேர்த்து வெளியிட அவகாசமில்லாமைக்கு வருந்தி இன்று தெரிவிக்கலாகிறது.

முன்னர் திருவடிப்பூரமஹோத்ஸவதிருப்பவித்ரோத்ஸவங்களில் ஸன்னிதியில் ஸ்ரீ அழகியசிங்கரின் கடாக்ஷத்திற்கு அடியேன் இலக்காகப்பெறும் ஸமயங்களில் அடியேனை நோக்கி "நடக்கப்போகிற ஸதஸ்ஸை தேவரீர் அக்ராஸனம் வஹித்து நடத்தவேணும்" என்று நியமித்தருளுகையில் "அடியேனுக்கு அவ்வளவு யோக்யதையில்லை. ஸ்ரீஸ்வாமியேதான் அக்ராஸனம் வஹித்தருளவேணும்" என்று விஜ்ஞாபித்து ப்ரார்த்தித்துமிருந்தேன். அப்படியே ஸ்ரீஸ்வாமி தாமே அக்ராஸனம் வஹித்தருளியாகிறது பலதேசங்களிலிருந்து வித்வான்கள் எழுந்தருளியிருக்கின்றார்கள். தினப்படியாகப் பல பலர் வந்துகொண்டுமிருக்கிறார்கள். அவரவர்கள் கற்ற கல்விகளில் பரீக்ஷை கொடுக்க த்ரிமதஸ்தர்களான வித்யார்த்திகளும் வருகிறார்கள். பரீக்ஷித்து ஸன்மானமளிப்பதென்பது ஸ்ரீஸ்வாமியிடமில்லை. எதிரே உட்கார்ந்து வாய் திறக்கும்போதே நூறு ரூபா நோட்டு அவரவர்களின் மடியில் வந்து விழுகிறது. உடனே ஸ்ரீகார்யதுரந்தரர் அவர்களின் வழிச்செலவைக் கேட்டறிந்துகொடுக்கிறார்.

ப்ரஸங்காத் ஸ்ரீகார்யம் ஸ்வாமியைப்பற்றிச் சிறிது தெரிவிக்கிறேன். ஸ்ரீ உ. வே. வித்வான். பனமுகை வீரவல்லி நரஸிம்ஹாசாரியர் என்பவர் ஸ்ரீஸந்நிதியில் ஸ்ரீகார்யதுரந்தரராக நெடுநாளாய் இருந்துவருகிறார். இந்த ஸ்வாமி யுவாவாயும் வித்யாவிநய ஸம்பந்நராயுமிருப்பது இவ்வாஸ்தானத்திற்குத் தனிச்சிறப்பை விளைக்கின்றது. பாண்டித்யம் ஒருபுறமிருக்க, ப்ராமாணிகத்வமும் விச்வஸநீயத்வமும் இவர் பக்கல் மிகமிக விளங்குவதைப்பற்றி ஆனந்தம் பொங்கி இது எழுதலாயிற்று. நிற்க,

எப்போதும் உடனிருக்கிற வித்வான்களும், காஞ்சீ வித்வான்களும் ஸதஸ்ஸுக்காக எழுந்தருளின உ. வே. மதுராந்தகம் வீரராகவாசாரியர் ஸ்வாமி, உத்தமூர் வீரராகவாசாரியர் ஸ்வாமி, ஒப்பிலியப்பன் ஸன்னிதி. நவநீதம் ஸ்ரீராமதேசிகாசாரியர் ஸ்வாமி, மதுராந்தகம் ஸம்ஸ்க்ருத காலேஜ் • பாத்யாயர்கள், மைஸூர்

காலேஜ் உபாத்யாயர்கள் முதலான வித்வான்கள் பலரும் ஸதஸ்ஸை அலங்கரித்தும் விஷய சர்ச்சைகளில் அந்வயித்தும் போந்தது குறிப்பிடத்தக்கது தென்னாட்டிலிருந்து வடநாட்டுக்குச் சென்று அங்கு ஸந்த்யாவந்தன மந்த்ரங்களும் ஸஹஸ்ரநாமமும் கற்பித்துவருகிற ஒருவர் தாமும் இந்தவித்வத்கோஷ்டியில் கலந்து கொண்டு * **ஸ்வயமபி லிகிதம் ஸ்வயம் நஜாநாதி**போலே *ஸ்வயமபி கதிதம் ஸ்வயம் நஜாநாதி யென்னநின்று கண்பிதுங்க வாயலற கோஷித்ததொன்றே இந்த ஸதஸ்ஸுக்கு த்ருஷ்டிபரிஹாரமாயிருந்தது. அவர் யாரென்றால் "வண்ணானுக்கு வண்ணாத்திமேலாசை; வண்ணாத்திக்குக் கழுதைமேலாசை இத்யாதிகளை யெழுதக் கற்றவர்" என்று பண்டே ப்ரஸித்தி பெற்றவர்.

ஸ்ரீமத் பரமஹம்ஸ இஞ்சிமேட்டழகிய சிங்கர் பூர்வாச்ரமத்தில் வாதகேலிகளில் அந்வயிக்கும்போது கோபதாபலவலேசமுமின்றி, புன்முறுவலோடே ஸாதிக்குமழகை நினைத்து மனம் தெளிந்தேன். அதேபோல், ப்ரக்ருதம் அழகிய சிங்கர் தாமும் ஒவ்வொரு விஷய விசாரத்திலும் நேர்மையான நெறி தவருமல் ம்ருதுமதுரமான ஸூக்திகளாலே ஸதஸ்யர்களை ரஞ்ஜிப்பித்தருளினது அனைவர்க்கும் பரமானந்த ஸந்தோஹ ஸந்தாயகமா யிருந்தது. மற்றவை பின்.—***பத்திராதிபர்.***

# தலைநகரில் ஸ்ரீ வைஷ்ணவ மஹநீயரின் ஷஷ்டியப்தபூர்த்தி

(*A. K. கிருஷ்ணசாமி*)

*டில்லிவாழ் ஸ்ரீவைஷ்ணவ சம்பிரதாயஸ்தர்களில் கடந்த தலைமுறையில் விசிஷ்டாத்வைதத்தை அங்கு பிரசாரம் செய்ய பரிச்ரமப்பட்ட மஹநீயர்களில் டாக்டர் K. S. கிருஷ்ணன், ஸ்ரீ S. R. S. ராகவன், ஸ்ரீ M. அனந்தசயனமய்யங்கார் ஜஸ்டிஸ் ஜகன்னாததாஸ், ஸ்ரீ A. S. அய்யங்கார் இவர்கள் அக்ரகண்யாவர். இப்பெரியோர்களால் ஸ்தாபிக்கப்பட்டு வளர்க்கப்பட்ட டில்லி ஸ்ரீவைஷ்ணவஸித்தாந்த ஸபை மூலம் ஸமீபகாலத்தில் ஸம்பிரதாயத்திற்கு ஸேவை செய்த பிரமுகர்களில் ஸ்ரீமான் மையூர் K. R. ராஜகோபாலய்யங்கார் திருநாமம் பிரஸித்தம். இந்த ஸ்வாமி 'ஸ்ரீராம மந்திர்' என்ற சக்கிரவர்த்தி திருமகன் ஸன்னிதிக்கு செய்துள்ள கைங்கர்யங்கள் ஆஸ்திகஉலகம் அறிந்ததே. மத்திய சர்க்கார் சர்விஸிலிருந்து சமீபத்தில் ஓய்வு எடுத்துக்கொண்ட இப்பெரியாருடைய ஷஷ்ட்யப்தபூர்த்தி ஆகஸ்ட் 9-ந்தேதியிலிருந்து மூன்றுநாட்கள் வேதபாராயண திவ்யப்பிரபந்தசேவையுடன் வெகு விசேஷமாக கொண்டாடப்பட்டது. அச்சமயம் ஸ்ரீரங்கம், பெருமாள் கோயில், ஸ்ரீபெரும்பூதூர் முதலிய திவ்யதேச மரியாதைகளும் ஸ்ரீமத் பரமஹம்ஸேத்யாதி ஸ்ரீ ஸ்ரீமந்நாராயண ராமானுஜ ஜீயர்ஸ்வாமி, மஹாமஹிமோபாத்யாய ஸ்ரீமான் ப்ர. ப. அண்ணங்கராச்சாரியர் ஸ்வாமி முதலிய ஆசார்ய ஸார்வபௌமர்களிடமிருந்து மங்களாசாஸனங்களும் கிடைக்கப்பெற்று கௌரவிக்கப்பட்டார். ஸ்ரீ முதலியாண்டான் ஸ்வாமி திருமாளிகை திருவடி சம்பந்தியான ஸ்ரீராஜகோபாலய்யங்கார் தனது ஷஷ்ட்யப்தபூர்த்தியை வியாஜமாகக்கொண்டு திருக்கோயில்கள் ஜீர்ணோத்தாரணத்திற்கு கணிசமான நன்கொடைகள் சமர்பித்தது பாராட்டுக்குரிய விஷயமாகும்.*

## P. B. அண்ணங்கராசார்ய ஸ்வாமிகளின் நூல் துறைகள்.

1. நாலாயிர திவ்யப்பிரபந்த வுரைகள்.
2. பூர்வாசார்ய தமிழ்ப்பிரபந்த ,,
3. ஸகல பூர்வாசார்ய ஸ்தோத்ர ,,
4. ஆழ்வாராசார்யப் பிரபாவ நூல்கள்,
5. இதிஹாஸ புராண சரித்திர ,,
6. ரஹஸ்யார்த்த விளக்க ,,
7. வேதாந்தப் பொருள் விளக்க ,,
8. ஸத்ஸம்ப்ரதாயார்த்த விளக்க ,,
9. வேதவிசாரலக்ஷண நூல்கள்.
10. லோகாபிராம உபன்யாஸ நூல்கள்
11. பரபக்ஷப்ரதிக்ஷேப நூல்கள்
12. உபந்யாஸக ஸௌபாக்ய வெளியீடு
13. வடமொழி நூல் திரள்கள்,
14. ஹிந்தீ பாஷையில் நூல்கள்
15. தெலுங்கு பாஷையில் ,,
16. பூர்வாசார்ய க்ரந்த வெளியீடுகள்

விரிவான கியாடலாகுகள் தருவித்து விவரங்காண்க.

சந்தாப்பணம் M. O. செய்பவர்கள்

*Editor*, GRANTHAMALA, Kancheepuram-631503

என்ற விலாசத்திற்கு அனுப்புக.

n-delivered please return to :

P. B. ANNANGARACHARYA,

KANCHIPURAM Pin Code-631503



To

Sriman / Srimathi

528. V. T. Thirunarayana Iyengar,
Professor,
35, Devambi Agraharam,
MYSORE

Edited and Published by P. B. Annangaracharya Swami
for Madras Sathgrantha Prakasana Sabha.

Printed by T. A. P. Srinivasavaradan at Sri Venkateswara Press,
Sannidhi Street, Kancheepuram-631503.